# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 18 Issue 5 December 2023 Rs.25
ஆண்டு 18 இதழ் 5 டிசம்பர் 2023 ரூ.25



கில்லர்ஸ் ஆஃப் தி ஃப்ளவர் மூன்
திரை விமர்சனம்

இலங்கையில் தமிழக தமிழர்கள்
கரைக்கப்படாத துயரத்தின் நிழல்

நேர்காணல்
நோபல் விருதாளர் ஜான் போஸ்

திருவல்லிக்கேணி

# திவ்ய தேசத்தின் இஸ்லாமிய உலகம்

ஆண்டு 18 இதழ் 5

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

டிசம்பர்-2023 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவிசுப்பிரமணியன்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# அமைதியைத் தேடி

## ஜான் போஸ்

நேர்கண்டவர்: **மெர்வ் எம்ரே**
தமிழில்: **ஸிந்துஜா**

நார்வேயின் சறுக்குப் பாறைகளுக்கு இடையே ஓடும் பனியாறுகளில் இரண்டாம் இடத்தைப் பெற்றிருக்கும் ஹார்டஞ்சர் பனியாறு, வட திசைக் கடலிலிருந்து, மேற்குச் சமதளத்தில் நிற்கும் மலைகளை நோக்கி ஓடுகிறது. அவ்வழியில் ஒரு கரைப் பகுதி இருட்டாகவும் ஆற்று நீரின் கறுப்பில் ஒளிபட்டு வெள்ளியைப் போல மினுமினுக்கின்றதாகவும் உள்ள இடத்தில் ஸ்ட்ராட்பார்ம் என்னும் சிறிய கிராமத்திலிருந்து போஸ் அறக்கட்டளை இயங்கி வருகிறது. இந்த வருடம் இலக்கியத்திற்கான நோபல் பரிசைப் பெற்ற ஜான் போஸ் *1959*இல் இங்குதான் பிறந்து வளர்ந்தார். உலகப் புகழ்பெற்ற தலைசிறந்த நாவலாசிரியர்களில் ஜான் போஸ் ஒருவர். தவிர ஐரோப்பாவில் உருவான மிகச் சிறந்த நாடக ஆசிரியராகவும் கட்டுரையாளராகவும் திகழ்கிறார்.

இந்த அறக்கட்டளையின் உறுப்பினர்கள் துறைமுக வளைவை நோக்கிக் கட்டப்பட்டுள்ள பிரார்த்தனை மண்டபத்தில் தங்கள் கூட்டத்தை நடத்துவது வழக்கம். இதற்கு அருகிலுள்ள இரண்டு வெண்ணிறக் கட்டிடங்களில் ஒன்றில் போஸ் வளர்ந்தார். அவரது அன்னை இன்றும் அங்கே வசித்து வருகிறார். அந்த வீடு போஸின் பாட்டனாருக்குச் சொந்தமானது.

இந்த ஆகஸ்டில் போஸ் அறக்கட்டளை ஜான் போஸ் படைப்புகளின் மீதான ஓர் உலகளாவிய கருத்தரங்க நிகழ்ச்சிக்கு மொழிபெயர்ப்பாளர்கள், பதிப்பகத்தினர், பத்திரிகை நிருபர்களை அழைத்திருந்தது. அந்த நிகழ்ச்சி நடந்த கட்டிடத்தின் மேல் மாடியில் ஹார்டன்ஜர் வயலின் விற்பன்னரின் இசையில் சுழல் நடன நிகழ்ச்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. கீழ்த்தளத்தில் ஆடை அலங்காரக் கலைஞர் அசே ஜோன்ஸின் கண்காட்சியைப் பார்வையிட வசதி தரப்பட்டிருந்தது. படுக்கை விரிப்புகள், தலையணை உறைகள், கைக்குட்டைகள், இரவு ஆடைகள் ஆகியவற்றில் போஸின் எழுத்துக்கள் தைக்கப்பட்டிருந்தன. அறக்கட்டளை உறுப்பினர் ஒருவர் ஜோன்ஸின் ஒரு துணியை எடுத்து அதிலிருந்த போஸின் வரிகளை அங்கு கூடியிருந்த மொழிபெயர்ப்பாளிகளில் யாராவது ஒருவர் மொழிபெயர்க்க முன் வருகிறாரா என்று கேட்டார். கூட்டத்தில் சலசலப்பும் முணுமுணுப்பும் கேட்டன. சூழலில், போட்டியில் பங்கு பெறும் உற்சாகமும் வெல்லும் ஆசையும் நிரம்பி வழிந்தன.



ஒளி, இசை, தூய நீர், கவரும் ஆடைகள் ஆகியவை நிரம்பிய இந்தச் சூழ்நிலையை ஒரே வார்த்தையில் விளக்க வேண்டுமென்றால் அது: 'புனித யாத்திரை!' வாழும் படைப்பாளிகளுக்கு மிக்க மரியாதை கொடுத்து நடத்தப்படும் இம்மாதிரி நிகழ்ச்சி மிகவும் அபூர்வமானது. தான் மேற்கு நார்வேயின் கிராமப்புரத்தைச் சேர்ந்த சாதாரண ஆசாமி என்று போஸ் என்னிடம் கூறினார்.

அவர் வாழ்க்கையின் ஒரு கட்டத்தில் ஒரே சமயம் கம்யூனிஸ்ட்டாகவும் அராஜகவாதியாகவும் ஹிப்பியாகவும் வலம் வந்தார். வயலின் வாசிப்பதில் அவருக்கு மிகவும் ஈடுபாடு இருந்தது; புத்தகங்கள் படிப்பதிலும்! பெர்கன் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து ஒப்பீடு இலக்கிய இயலை முதன்மைப் பாடமாக எடுத்துப் படித்தார். மேற்கத்திய நார்வேயின் கிராமப்புறங்களில் வெகுவாகப் புழங்கிய நீனாக்ஸ் மொழியில் தன் படைப்புகளை உருவாக்கினார். அவர் கல்வி கற்க ஆரம்பித்ததும் இம்மொழியில் தான் என்று ஒரு சந்தர்ப்பத்தில் என்னிடம் கூறினார். அவரது நாவலான 'சிவப்பு,



கறுப்பு' 1983இல் பிரசுரமாயிற்று. தொடர்ந்து வந்த முப்பது ஆண்டுகளில் அவர் 'துயரம் மி', 'துயரம் மிமி', 'காலையும் மாலையும்', 'அலிஸும் நெருப்பும்', 'மூன்று தொகுப்பு' ஆகியவற்றை எழுதினார். அதன் பின்னர் நாடக ஆசிரியராக மாறிப் பிரமிக்கத்தக்க அளவில் வெற்றிபெற்றார். 2012ஆம் ஆண்டில் கத்தோலிக்கராக மாறினார். குடியை விட்டொழித்தார். மறுமணம் செய்துகொண்டார்! அதன் பின் ஏழு வால்யூம்கள் அடங்கிய எண்ணூறு பக்க 'செப்டாலஜி' நாவலை ஒரு வாக்கியத்தில் எழுதி முடித்தார். அச்சமயம் தனது எழுத்தில் 'ஆசுவாச நடையை'ப் புகுத்தினார்.

செப்டாலஜியின் கதை சொல்லி அஸ்லே என்ற ஓவியன், கத்தோலிக்கனாக மாறியவன். தன் மனைவியை இழந்த துயரத்தில் ஆழ்ந்திருப்பவன். கிறிஸ்துமஸ் தினத்துக்கு முந்திய இரவில் அஸ்லே தனது பழைய நண்பன் ஒருவனைப் பார்க்கிறான். அவன் பெயரும் அஸ்லே. அந்த நண்பன் விஷ மது அருந்தி நகரத்துத் தெரு ஒன்றில் மயங்கி விழுந்து மரண நிலையில் கிடக்கிறான். அவர்களின் நினைவுகள் இரட்டிப்பாகின்றன. திரும்பத் திரும்ப எழுகின்றன. சேர்ந்து மயங்கிய நிலையில் பேசுவது எல்லாம் ஒரு குரலாக ஒலிக்கின்றது. ஒரே நேரத்தில் பல நேரங்களும் இடங்களும் தோன்றி மறையும் மனநிலை ஏற்பட்டு விடுகின்றது.

போஸின் நாடகங்களையும் நாவல்களையும் படிக்க விரும்பும் ஒருவர் அவற்றுடன் ஐக்கியமாகி விடத் தயாராக இருக்க வேண்டும். ஆரவாரமற்று ஒதுங்கிய மனநிலை கொண்ட ஆசிரியரின் எழுத்தில் காணப்படும் அழுத்தம் அவரது படைப்புத் தளமெங்கிலும் பரவிக் கிடக்கிறது. அவரது பெரும்பாலான பாத்திரங்கள் ஆண், பெண், அம்மா, குழந்தை என்றுதான் அழைக்கப்படுகிறார்கள். பெயர் என்று எதுவும் தனியாக இல்லாது. நினைவுகளின் அடியாழத்துக்குச் சென்று உறவுகளின் உண்மையான அர்த்தத்தைப் பரிசீலிக்கும் இப்பெயர்கள் வாசகரைப் படைப்புடன் ஒன்றவைக்கின்றன. நான் படித்தவற்றுள் 'செப்டாலஜி', இறையாண்மையின் நடப்பு பற்றி எனக்கு நம்பிக்கையைத் தோற்றுவித்தது.

ஜோஸ் மிகவும் மதித்த பதினான்காம் நூற்றாண்டு வேதாந்தி எக்கார்ட் இவ்வாறு கூறுகிறார்: 'இருட்டில்தான் ஒருவர் வெளிச்சத்தைக் காண்கிறார். அது போலவே நாம் துக்கத்தில் மூழ்கிக் கிடக்கும் போது இந்த ஒளிதான் நமக்கு அருகாமையில் ஆதரவாக இருக்கிறது.'

மற்றவர்களை ஒப்பிடுவது போஸுக்கு அவ்வளவு சரியாகப்படவில்லை. பெர்னார்ட்? ஆக்கிரமிப்பாளர்! பெக்கெட்? அடக்க முயற்சிப்பார்! இப்சன்? 'இருப்பதிலேயே அவர்தான் எனக்குத் தெரிந்து அழித்தல் வேலையில் மிக்க ஆர்வம் காட்டியவர்!' என்கிறார் போஸ். மேலும், 'எனக்கு அவ்வளவாகச் சரியாக வராத ஆங்கிலத்தில் கூற வேண்டுமானால் என் எழுத்து சமாதானத்தை

விரும்புகிறது,கிறிஸ்துவ பாஷையில் சொல்வதென்றால் அமைதியை நாடுகிறது!' என்கிறார்.

இந்தக் கூட்டத்துக்கு போஸ் வரமுடியவில்லை. காரணம் அவர் அதற்கு முந்திய இரவு நார்வே கலாச்சார அமைச்சகம் தந்த விருந்தில் கலந்துகொள்ள வேண்டியிருந்தது. விருந்துக்கு வந்த நார்வே வெளியுறவு அமைச்சர் ஓட்விக் விட்ஜென்ஸ்டெய்ன், 'எங்கு ஒருவரால் பேச முடிவதில்லையோ அங்கு அவர் மௌனத்தைக் கடைப்பிடிப்பது நல்லது' என்று கூறினார்.

அந்த விருந்துக்குப் பின் நாங்கள் 'இலக்கிய இல்லத்தில் போஸ் அறையில்' உட்கார்ந்து உரையாடினோம். அந்த அறையில் தலையைக் குனிந்தபடி போஸ் அமர்ந்திருக்கும் ஓவியம் சுவரில் இருந்தது. அந்த ஓவியத்தில் காணப்பட்டதை விட போஸ் அவர் படைப்பில் வர்ணித்த அஸ்லேயைப் போல இருந்தார். நீண்ட வெள்ளைப் போனி டெயில், கறுப்பு ஓவர்கோட்டு, கறுப்பு ஷூக்கள், சட்டைப் பையில் மூக்குப்பொடி டப்பா... உரையாடுவது அவருக்குச் சற்று அயர்ச்சியைத் தருவது போலக் காணப்பட்டாலும் பேசிய வார்த்தைகளில் உறுதி தெரிந்தது.

எங்கள் உரையாடலில் அவர் எழுத்து தரும் பல்வேறு உணர்ச்சிகளை நான் கவனித்தேன். அறிவார்ந்த ஆர்வம், பாதுகாப்பு உணர்வு ஆகியவற்றை. கதைகளில் சந்தேகத்துடன் தென்படும் மெய்யுணர்வு பற்றிய வருணனைகள் எப்போதும் எனக்கு ஆச்சரியத்தைத் தந்திருக்கின்றன. ஆனால், இவைகளுக்கு அப்பால் அவர் அன்பான மனிதராக விளங்கினார். காதல், கருணை, பொறாமை, சமாதானம், குழப்பம், சாவுக்கு அருகாமையில் சென்று திரும்பிய அனுபவம், மொழிபெயர்த்தல் மீது அவர் கொண்டுள்ள காதல் என்று பல்வேறு விஷயங்களை எவ்விதத் தயக்கமும் இன்றிப் பேசினார்.

அவருடனான உரையாடல் தெளிவைத் தரும் பொருட்டு இங்கு செம்மைப்படுத்தப்பட்டுள்ளது.

-எம்ரே

**நீங்கள் ஏன் நேர்காணல்களை அனுமதிப்பதில்லை?**

நான் என் நேர்காணல்களை மின்னஞ்சல் மூலமாகத் தருகிறேன். பெரும்பாலும் ஆங்கிலம் எழுதுவது எனக்கு எளிதாயிருக்கிறது, பேசுவதை விட.

**நான் பலரைப் பேட்டி கண்டுள்ளேன். அவர்கள் எழுதித் தர ஆர்வமாயிருப்பதற்கு காரணம் பேச இயலாததால்தான் என்று கூறியிருக்கிறார்கள்.**

எனக்கும் அப்படித்தான். விட்ஜென்ஸ்டெய்ன் கூறியபடி நம்மால் பேச முடியாத போது அமைதியாக இருப்பது நல்லது. ஜாக்விஸ் தெரிதா என்ன சொன்னார் தெரியுமா? 'உன்னால் சொல்ல முடியாததை எழுதிக் காண்பித்து விடு.' நான் இந்தக் கருத்துடன் ஒத்துப் போகிறேன்.

**'ஒரு தேவதை மேடையில் நடக்கிறாள்' என்னும் உங்களுடைய ஆரம்பக் காலக் கட்டுரைகளில் தெரிதா மிக அதிகமாக வலம் வருகிறார். உங்களின் நாவல்களிலும் நாடகங்களிலும் கூடப் பேச்சும் அமைதியும் பற்றிய தெரிதாவின் சிந்தனையைக் காண முடிகிறது.**

நான் 1979இல் தெரிதாவைப் படிக்க ஆரம்பித்தேன். இங்கே நார்வேயில் பல்கலைக்கழகங்களில் மார்க்ஸீயத்தின் தாக்கம் அதிகம். தீவிர மாவோ கட்சி ஒன்று இங்குள்ள கல்வியாளர்களையும் எழுத்தாளர்களையும், இவர்களைப் போன்றவர்களையும் தனது கட்டுப்பாட்டில் வைத்திருந்தது. அது அன்றைய தினத்துப் பொறி. இதில் நானும் கட்டுண்டு கிடந்தேன். நான் சமூகவியலைப் படிக்க ஆரம்பித்த போது அது படுமுட்டாள்தனமான கருத்துக்களைக் கொண்டிருந்தது போல எனக்குப் பட்டது. ஆகவே, நான் தத்துவ இயலுக்கு மாறினேன். அந்தச் சமயத்தில் மார்க்ஸீயத்திலிருந்து வெளியேறி, பிந்திய கட்டமைப்பு வாதத்துக்கு மாறிச் செல்லும் உந்துதல் வலிமையாக இருந்தது. எனக்குத் தெரிதாவை முதன் முதலாகப் படித்த சம்பவம் தெளிவாக நினைவில் இருக்கிறது. டேனிஷ் மொழிபெயர்ப்பில் வந்த மொழிக் கட்டுடைப்பு பற்றிய தெரிதாவின் Grammatology என்னும் புத்தகம் அது.

அந்தப் புத்தகத்தின் தாக்கம் எனக்கு அதிக அளவில் இருந்தது. மார்ட்டின் ஹெடக்கரின் 'இருத்தலும் காலமும்' புத்தகத்தை நீங்களும் படித்திருக்கலாம். எனக்கு அது மிகவும் பிடித்திருந்தது. அது படிக்கக் கடினமாக இருந்தாலும் நான் அதனால் கவரப்பட்டேன். ஹெடக்கரின் முக்கிய கேள்வி: 'எல்லா உயிர் வாழ்க்கைக்கும் பொதுவானது என்ன?'

ஆனால், தெரிதாவின் முக்கிய கேள்வி இதற்கு நேரெதிராக இருந்தது: 'எது உயிர் வாழ்க்கையில் வித்தியாசத்தைக் கொண்டு வருகிறது?' அப்போது எழுதுவது ஒரு புதிராக எனக்கு இருந்தது. அது பேசுவதைப் போன்றதல்ல. வித்தியாசமானது. மிக வித்தியாசமானது. அதனால்தான் தெரிதாவுடனும் அவரது எழுத்துடனும் எனக்குத் தொடர்பு இருந்தாற் போல உணர்ந்தேன்.

இதன் பிறகு நான் ஒப்பிலக்கியம் படிக்க ஆரம்பித்தேன். அப்போது நான் என் முதல் நாவலையும் சில கட்டுரைகளையும் எழுதி விட்டேன். நாவல் கோட்பாடு பற்றிதான் எனது படிப்பு இருந்தது. இக்கோட்பாடுகள் கதை சொல்லியை



முன்வைத்து எழுந்தவை. கதை சொல்லி, பாத்திரங்கள், அவர்களுக்கிடையேயுள்ள வெவ்வேறான பார்வைகள், சம்பவங்கள் - இவையெல்லாம் முக்கியமானவையே. ஆனால், கதை என்பதன் முக்கியத்துவம் கதை சொல்லியிடம் இல்லை. வாய்வழிக் கதையாடல்களால் ஆரம்பத்தில் இந்த முக்கியத்துவம் கதை சொல்லியிடம் சென்றது. ஆனால், கால மாற்றத்தில் கதை என்பது படைப்பாளியின் முக்கியத்துவத்தை உணர்த்துவது என்றாகி விட்டது என்று நான் கருதுகிறேன். எழுத்தாளன் என்பவன் அவன் எழுத்தின் ஒரு பாகம், அதன் அமைப்பு அவனை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். என் எழுத்து இக்கருத்தின் அடிப்படையில் அமைய வேண்டும் என்று தீர்மானித்தேன். என் இசைப் பின்னணி இதற்கு உறுதுணையாக இருந்தது என்று கூற வேண்டும். நான் முதலில் எழுத ஆரம்பித்தது, என் பனிரெண்டாவது, பதிமூன்றாவது வயதில்- ஒரு கவிதையை. பிறகு சில கவிதைகளும் கதைகளும் எழுதினேன். அவை நான் எனக்காக, நானே எழுதியவை, பள்ளிக்காக இல்லை. என்றும் அவை என் அந்தரங்கத்துக்கு உரித்தானவை என்று உணர்ந்தேன். நான் தங்குவதற்கு ஒரு தனியிடம் கிடைத்து விட்டதைப் போல இருந்தது.

**அந்த இடத்தைப் பற்றிச் சொல்லுங்கள்.**

அது ஒரு பாதுகாப்பான இடம். அதை என் பனிரெண்டாவது வயதில் கண்டுபிடித்து விட்டேன். இப்போது என் வயது அறுபத்தியிரண்டு. அந்த இடம் - அது நானல்ல - என்னுள் இருப்பது. நான் வழக்கமாக என்னை ஜான் என்று சொல்லுவேன். எனக்கு ஒரு வெளிமுகமும் உண்டு. அது ஜான் போஸ். ஆனால், எழுத்தாளன்? அவனுக்கு ஒரு பெயரும் கிடையாது.

அந்த இடம் நடமாடுவதற்கும் கேட்பதற்குமானது. தங்குவதற்கு மிகவும் பத்திரமானது. அது பயத்தை விளைவிப்பதும் சாத்தியம். ஏனென்றால் அது நான் அறிந்திராததை அடைய என்னை இட்டுச் செல்லும் வழி. என் சிந்தனையின் எல்லைகளுக்கு நான் செல்ல வேண்டும். இந்த எல்லைகளை நான் கடக்க வேண்டும். நீங்கள் சற்று வலிவற்றவராக இருந்தால் இந்த எல்லைகளைக் கடக்கும் முயற்சி ஆபத்தில் கொண்டு போய் விட்டுவிடும். பல வருடங்கள் நான் இம்மாதிரி உணர்ந்தபடி கிடந்தேன். என் விஷயங்களை எழுதாமல், என் எல்லைகளைக் கடக்க முடியாதவனாக சில காலம் இருந்தேன்.. நான் சிறப்பாக எழுதும் போது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது - நான் எழுதிக்கொண்டிருப்பவை ஏற்கனவே எழுதியாகிவிட்டது என்று. எனது எல்லை எங்கோ வெளியில் இருக்கிறது; அது மறைவதற்கு முன்பு நான் எழுதி விட வேண்டும்.

சில சமயங்களில் இவற்றை ஒரு மாதிரி சமாளித்து விடுவேன். உதாரணமாக ‘காலையும் மாலையும்’ நாவலை எழுதும் போது இரு பாகங்களையும் எந்த வித மாற்றமும் இல்லாமல் முடித்தேன். ‘யாரோ வரப் போகிறார்கள்’ என்னும் என் முதல் நாடகத்தை ஒரே தடவையில் எழுதி முடித்து விட்டேன். ஆனால், ‘செப்டாலஜி’யைப் போன்ற பெரும் நாவலை எழுதும் போது பல மாற்றங்களைச் செய்ய வேண்டியிருந்தது. அதற்கான சில பகுதிகளைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது.

ஒரு புதிய இடத்தில் நுழைந்து புதிய உலகத்தைத் தரிசிக்க நான் செய்யும் முயற்சி என்னைச் சிறப்பாக எழுத வைக்கிறது. எதிர்காலத்தில் என்னால் எதுவும் எழுத முடியாமல் போகலாம் என்னும் நிச்சயம்

என்னிடம் இப்போதே இருக்கிறது. அதனால் பாதகம் எதுவுமில்லை. யாரோ எதுவோ எனக்குத் தந்த பரிசுதான் நான் படைப்பில் இறங்கியது என்று நினைத்துக்கொள்கிறேன்.

**பனியாற்றின் கரையிருட்டும் கறுப்பு நீரின் மீது பாயும் ஒளி வெள்ளமும் பற்றி நினைத்துப் பார்க்கிறேன். நீங்கள் உங்கள் இளைமைப் பருவத்தின் பெரும் பகுதியைப் படகில் செலவழித்திருக்கிறீர்கள். அந்த இடத்துக்குச் சென்ற போது உங்கள் எழுத்தின் சூழல் பற்றிக் கற்பனை செய்ய முடிந்தது.**

நானும் என்னையொத்த சிறுவர்களும் வெகு சுதந்திரமான சூழலில் வளர்க்கப்பட்டோம். ஏழெட்டு வயதிருக்கும் போதே தனியாகப் படகில் செல்ல அனுமதிக்கப்பட்டோம். பல நினைவுகளில் முக்கியமானது, தந்தையுடன் கோடைக்காலப் பகலிலும் இரவிலும் மீன் பிடிக்கச் சென்ற தருணங்கள்! இரவின் சுற்றுப் புறமும் இயற்கை அழகும் கடற்கரையின் விரிந்த பரப்பும் மனதில் எழுப்பியது - அதை ஒரு சித்திரம் என்று சொல்ல விரும்பவில்லை என்றாலும் - அந்தச் சித்திரம் வெளிப்படுத்திய வண்ணங்களும் இசையொலியும் மறக்க இயலாதவை. அந்த வண்ணத்தையோ கேட்ட ஒலிகளையோ எழுத்தில் கொண்டு வர இயலாது. அது ஒரு கேட்கும் செயல். நான் கேட்கிறேன்.

உங்கள் காதில் விழுவது என்ன?

நான் எழுதுவது எனக்கு ஒலிக்கிறது. ஆனால், பார்க்க முடியவில்லை. கற்பனை செய்ய முடியவில்லை. அது எங்கிருந்து வருகிறது என்றும் எனக்குத் தெரியவில்லை. ஆனால், அது என்னுடையதுதான். அது என் மொழியென்று உபயோகித்துக்கொள்ள முயலுகிறேன். எழுதுவதின் பின்புலம் என் படைப்பின் உருவத்தை நிர்ணயிக்கிறது. உள்ளடக்கம் உருவம் சார்ந்து நிற்கிறது. ஒவ்வொரு உரைப் பகுதிக்கும் புதிதான உருவம் உண்டாகிறது. ஒரு தனித்த அண்ட பேரண்டத்தை இந்த உருவம் பெரிதும் தொடர்புகொள்கிறது. நானே அதை உருவாக்குகிறேன். உதாரணமாக' செப்டாலஜி' என்பது ஓர் அண்டம். 'மூன்று தொகுப்பு' என்பது இன்னோர் அண்டம்.

**உங்கள் உலகங்கள் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டவையாக உள்ளன. அவை அவற்றுக்கான தர்க்கத்தையும் உருவத்தையும் தம்முள் கொண்டுள்ளன. அல்லது பாத்திரங்களின் பெயர்களில் மட்டுமாவது. 'செப்டாலஜி'யின் கதைசொல்லியான அஸ்லே வருணிப்பது போல 'அவை உள்ளார்ந்த சித்திரத்தை' வெளிப்படுத்துகின்றன. ஒரு விதத்தில் முழுமை பெற்ற உருவங்களாகக் காட்சியளிக்கின்றன.**

இது மற்றொரு பக்கம். தனித்துவம் பெற்ற உலகமாக ஒவ்வொன்றும் விளங்க வேண்டும். 'மூன்று தொகுப்'பில் ஒவ்வொரு பாகமும் தனிப்பட்ட உலகம். ஆனால், அதே சமயம் மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டவை. அதனால் அது நாவலாகிறது. மூன்று குறுநாவல்களின் சேகரம் என்று அழைக்கலாம். 'மூன்று தொகுப்பு'ம் 'செப்டாலஜி'யும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. நான் ஒரே மாதிரி பெயர்களை, இடங்களை நாவல்களில் உபயோகிக்கிறேன். இச்சித்திரங்கள் திரும்பத் திரும்பத் தலை காட்டுகின்றன. ஏகப்பட்ட மனிதர்கள் நீரில் மூழ்குகிறார்கள், ஜன்னல் வழியே வெளியே பார்க்கிறார்கள்; பெரும்பாலும் கடலை அல்லது பனியாற்றை. ஓர் ஓவியன் மரத்தை வரைகின்ற மாதிரி. இதற்கும் முன்னால் பலர் அதை வரைந்திருக்கக் கூடும். ஆனால், அவன் தனது ஓவியத்தை வரைகிறான். நல்லதொரு ஓவியன் ஒன்றையே திரும்பத் திரும்பச் செய்கிறான். ஆனால், ஒவ்வொரு முறையும் அவனுக்குப் புதிய படிமம் கிடைக்கிறது. என் எழுத்தில் நான் செய்ய முயலுவது இதைத்தான்.

எப்படி மதத்தையும் இலக்கியத்தையும் ஒன்றாகக் காணுகிறீர்கள்?

நான் அறியாததைத் தேடிச் சென்ற போது மதத்தினால் கவர்ந்திழுக்கப்பட்டேன். நான் ஒரு நாஸ்திகனாக இருந்தேன். ஆனால், நான் எப்படி எழுத வந்தேன், என்ன நடந்தது எனக்கு என்று தெரியவில்லை. யார் எனக்கு இதைத் தந்தார்கள் என்ற கேள்விக்கும் விடை கிடைக்கவில்லை. நீங்கள் உங்கள் மூளையை விஞ்ஞானத்தால் பகுத்துப் பார்த்து விடலாம். ஆனால், உள்ளொளியை எப்படிப் பிடிக்க முடியும்? அது வேறு விதமான ஏதோ ஒன்று என்று எனக்குத் தோன்றியது. இலக்கியக் கோட்பாடுகளை, அவைகளை விட, இலக்கியம் அறிந்திருப்பது மிக மிக அதிகம்!

**அஸ்லே கடவுளைப் பற்றிக் கூட இம்மாதிரிதான் நினைக்கிறான். 'கடவுள் என்பவர் கைக்கெட்டாதவர்; ஆனால், மிக மிக அருகில் நிற்பவர்!' என்று.**

'செப்டாலஜி' சுயசரிதை எழுத்து இல்லை என்றாலும் அதில் காணப்படும் சிந்தனைகளும் பண்புக் கூறுகளும் என்னோடு பெருமளவில் ஒத்துப் போகின்றன. உதாரணமாக அஸ்லேயின் தோற்றம், வெண்முடி... அதில் வரும் கதாநாயகனின் பாத்திரம் என்னைப் போல் காணப்படுவதாக ஓர் ஆட்டோஃபிக்ஷன் எழுதினேன். என் சமகாலத்தவரின் நோக்குகளுடன் கதை உருவாயிற்று. ஆனால், கட்டுரையைப் போல வெளிப்படும் எண்ணங்கள் என் சொந்த வாழ்க்கையில் நிலவிய எண்ணங்களே. உதாரணமாகக் 'கடவுள் உனக்கு அருகாமையில் உள்ளார்; ஆனால், தொட முடியாது. அவர் தொலைவில் உள்ளார்; ஆனால், உன் நினைப்புக்கு



எட்டாதவர்' போன்ற கருத்துக்கள். உண்மையில் இவ்வுலகில் உள்ள சில மகிழ்ச்சியான மனிதர்கள் தங்கள் அனுபவங்களைக் கடவுளின் வடிவத்தில் பார்க்கிறார்கள்.

அஸ்லே மதத்தைக் கொள்கைப்பிடிப்பு அல்லது சித்தாந்த வழிமுறை என்று சொல்கிறான். கடவுளுக்கும் சர்ச்சுக்கும் சித்தாந்தங்களுக்குமான உறவை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள்?

*நீங்கள் கடவுளின் மீது உண்மையான பற்றைக் கொள்ளும் போது சித்தாந்தங்கள் மீதும் நிறுவனங்கள் மீதும் நம்பிக்கை கொள்வதில்லை. கடவுள் இருப்பதை நம்புபவர் என்றால் நீங்கள் சார்ந்திருக்கும் வட்டம் வித்தியாசமானது. அதற்காக சித்தாந்தங்களோ நிறுவனங்களோ இருக்க வேண்டாம் என்று ஒருவர் நினைக்கக் கூடாது. நம்பிக்கையின் மீதான மறைபொருள், இரண்டாயிரம் ஆண்டுகளாக நின்று நிலைத்திருப்பதால்தான் சர்ச் ஒரு நிறுவனமாக முடிந்தது. இதைப் புரிந்துகொள்வது அவசியம். ஆனால், சித்தாந்தங்கள் மதரீதியாக உண்மையை எதிரொலிப்பதில்லை.*

*நாம் இன்றிருக்கும் உலகில் பொருளாதாரத்தின் ஆதிக்கம் அளவற்ற சக்தியுடன் நடமாடுகிறது. உலகை நடத்துவதே அதுதான். இதற்கு எதிர்நிலையில் நடமாடும் சில சக்திகளில் சர்ச்சும் ஒன்று. சர்ச் நின்று நிலை பெற - முக்கியமாகக் கத்தோலிக்க சர்ச் பலம் பொருந்தியது - மதத்தைப் பரப்பியாகவேண்டும். சர்ச், முதலாளித்துவ முறைகளுக்கு எதிரானது. நம்மிடம் இலக்கியமும் கலையும் சிறந்த நிறுவனங்களாக நிற்கின்றன. ஆனால், அவை சர்ச்சைப் போல் பலம் நிறைந்தவை அல்ல.*

கருணை என்று எதை நம்புகிறீர்கள்?

*நான் அதைப் பற்றி அதிகமாக யோசித்துக் கொண்டிருக்கிறேன்.*

எனக்கு அது முக்கியமானது.

*எனக்கும்தான். அது முக்கியமான ஒரு கருத்தாக்கம். சில சமயம் நான் எழுதும் போது என் படைப்புத் திறன் எனக்கு ஒரு பரிசாக, சற்று இரக்கத்துடன் அனுப்பப்பட்டதாக நினைக்கிறேன். எனக்குத் தகுதி இருக்கிறதா என்ற கேள்வி என்னில் எப்போதும் இருக்கிறது. உதாரணமாக நீங்கள் இப்போது என்னுடன் உட்கார்ந்திருக்கிறீர்கள். இந்த அனுபவத்துக்கு நான் தகுதியானவனா என்ற சந்தேகம் எழாமலில்லை. நாடகத் தயாரிப்பில் நடிகர்கள் தங்கள் வரிகளைக் கற்கிறார்கள். மேடை, காட்சி அமைப்பு என்று நாடகத்துக்கு ஏகப்பட்ட வேலைகள் உள்ளன. இவற்றைச் செய்யுமாறு நான் பணிக்கிறேன். இம்மாதிரி செய்ய எனக்குத் தகுதியில்லை; என் தகுதிக்கும் மீறியது எனக்கு கிடைத்திருக்கிறது என்று எண்ணுவதை என்னால் தவிர்க்க முடியவில்லை.*

*நான் எழுதுவதும் நன்றாக எழுதுவதும் எனக்கு கிட்டிய கருணையினால்தான். வாழ்க்கையே ஒரு விதத்தில் கருணை நிரம்பியதாகத்தான் இருக்கிறது. இவ்வுலக வாழ்க்கையை வெறுப்பவர்களை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. பல விதங்களில் வாழ்க்கை சற்றுப் பிசகிய அமைப்புதான். சாவைக் கூடக் கருணை என்று நீங்கள் நினைப்பது தவறல்ல. எப்போதும் இங்கிருப்பது ஒரு வித சகிக்க முடியாத அச்சத்தைத் தருகிறது.*

அது துன்பத்தை உள்ளடக்கியிருக்கிறது.

*கிறிஸ்துவத்தில் கூறுகிறபடி வாழ்க்கை ஒரு பரிசு: கருணையினால் ஆனது. ஆனால், அதுவே முரண்களின் இருப்பிடமாக இயங்கித் துயர்களை*

எடுத்து வீசுகிறது. என்னிடம் நான் காண்பதிலேயே பலவும் முரண்பாடுகளை வெளிப்படுத்துகின்றன. சில சமயம் என்னை முரண்பாடுகளின் பிரகிருதியாகக் காண்கிறேன். இப்படியிருந்தும் எப்படி நான் என்னைத் தனியொருவனாக நினைக்கிறேன் என்பது எனக்குப் புரியவில்லை.

உங்கள் படைப்புகளில் குழந்தைப் பருவத்தை அழகாக வெளிப்படுத்தியிருக்கிறீர்கள். குழந்தைப் பருவம் முரண்பாடுகள் அற்றதா; பேதைமை காரணமாக?

அதைப் பற்றி நான் பேச விரும்புகிறேன். என் வாழ்வின் ஆதாரம் அதில் அடங்கியிருக்கிறது. என் ஏழாவது வயதில் ஒரு விபத்தில் சிக்கி சாவுக்கு அருகாமையில் கிடந்தேன். நான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து தொலைவில் என்னைப் பார்த்தேன். என்னை அமைதி சூழ்ந்திருந்தது. என் வீட்டைச் சுற்றியிருந்த வீடுகள் கண்ணில் பட்டன. அவற்றை நான் பார்ப்பது அதுதான் கடைசி முறை என்று எனக்குத் தோன்றிற்று. நான் டாக்டருடன் சென்றேன். எங்கும் அமைதி சூழ்ந்திருந்ததாகவும் மகிழ்ச்சி நிரம்பியிருந்ததாகவும் ஒளியூட்டுவதாகவும் தோன்றின. என் குழந்தைப் பருவத்தில் எனக்கு கிடைத்த இந்த அனுபவம் எனக்கு மிகவும் முக்கியமானது. அது என்னைச் சில நேரங்களில் நல்லவனாகவும் சில நேரங்களில் மோசமானவனாகவும் உணர வைத்த தருணம். அவ்வனுபவம் என்னை ஒரு கலைஞனாக உருவாக்கிய, உணர வைத்த தருணம் கூட.

முதலில் உங்களின் நாவல்கள் அனைத்தையும்தான் படித்தேன். பிறகுதான் உங்கள் எல்லா நாடகங்களையும் பார்த்தேன். உங்கள் நாடகங்களில் அழுத்தம் நிரம்பிய வலியை ஊட்டும் விவரணைகளாகப் பாலுணர்வு சார்ந்த பொறாமை வெளிப்பட்டுள்ளது. ஆனால், உங்கள் நாவல்களில் இது மேலோட்டமாக வர்ணிக்கப்படுகின்றன.

ஒரு நாடகத்தின் பிரதான அம்சம் பொறாமைதான். இது ஆதிகாலத்திலிருந்து நடந்து வந்திருக்கிறது. மேடையில் இருவர்; அப்போது மூன்றாவது நபர் வருவார். உடனே ஒரு நாடகம் நடந்து விடும். இருவருக்கு இடையேயும் ஒரு நாடகத்தை உருவாக்கலாம். என்னுடைய 'அம்மாவும் குழந்தையும்' அப்படி ஒரு நாடகம்தான்.

அதைப் படித்ததும் மிகவும் துக்கமாக உணர்ந்தேன்.

ஆம், அது சற்று டென்னஸி வில்லியம்ஸின் நாடகத்தைப் போன்றதுதான். பொறாமையை வைத்து நாடகங்கள் எழுதுவது எளிது என்பதால் நாடகங்கள் எழுதுவதில் எனக்கு அலுப்பு ஏற்பட்டது. பாலுணர்வு சார்ந்த பொறாமை நாடகத்தில் எழும் போது அது சாவைச் சுட்டிக்காட்டுவதாக எனக்குத் தோன்றும்.

வாழ்வும் சாவும் ஒன்றோடொன்று பின்னிச் செல்பவைதானே?

ஆம். அவை தொடர்புள்ளவை. அவை இரண்டையும் சமாளிப்பது ஒரு நல்ல நிலைப்பாட்டைத் தரும். ஒரு நாடகத்தை வெறும் பாலுணர்வுப் பொறாமையைச் சித்தரிப்பது என்ற நோக்கில் மட்டும் நெருங்கினால் அது நிறைவைத் தராது.

உங்களின் 'யாரோ வர போகிறார்கள்' நாடகத்தில் என்னை நாடகத்தோடு ஒன்றை வைத்தது, அதன் கதாபாத்திரங்களான ஆணும் பெண்ணும், எப்படி ஆழமாக, அந்த ஆழத்தை உணராமலே, தாங்கள் இருவர் மட்டும் ஒருவருக்கொருவர் தனித்து இருக்க வேண்டும் என்று விரும்புவதைத்தான்.

அது அவர்களின் வழி. இந்த உலகம் வாழத் தகுதியற்றது என்னும் எண்ணத்தில் அதை விட்டுத் தப்பித்து வெளியேற நினைக்கிறார்கள். எப்படியாவது தப்பித்து விட முடியும் என்று அவர்கள் நம்புகிறார்கள்.

ஆனால், உலகிலிருந்து ஒருவர் தப்பிவிட முடிவதில்லை.

அதுதான் முக்கியமான விஷயம். அவர்கள் தங்கள் உலகத்தை உருவாக்கிக் கொண்ட பின்னர், யாரோ வரப் போகிறார்கள். அல்லது வருவார்கள். தாங்கள் இருவர் மட்டுமே கொண்ட உலகத்தை அவர்கள் விரும்புவது அவர்களின் கனவு. நம்மில் அன்பு என்பது முழுமையை அடைவது என்பதுதான். அன்பை அடைந்து விடலாம். ஆனால், அவர்கள் விரும்பும் வழியில் அல்ல. நான் வழக்கமாக எழுதுவது போல இந்த நாடகத்திலும் பல்வேறு விஷயங்கள் பொதிந்துள்ளன. அம்மாதிரி என் எழுத்து அமைந்திருந்தது. நாடகம் உண்மையில் சொல்ல விரும்பியது சேர்ந்திருத்தல் என்பது இயலாத காரியம் என்பதைத்தான்.

உங்களின் 'இலையுதிர் காலக் கனவி'ல் வரும் ஒரு வரி எனக்கு மிகவும் பிடித்தமானது. ஓர் ஆணும் பெண்ணும் பெஞ்சில் உட்கார்ந்து குலாவிக் கொண்டிருக்கிறார்கள். அவனது திருமணம் அவர்களின் காதலுக்குக் குறுக்கே வந்து நிற்கிறது. அவன், அவளிடம் 'எனக்குக் காதல் என்பதில் நம்பிக்கை கிடையாது. நான் சொல்வது சாதாரண அர்த்தத்தில் அல்ல. தகப்பன்களிடமிருந்து குழந்தைகளை பிரித்துச் செல்லும் அன்பைப் பற்றி!' என்கிறான்.

அது ஒரு முட்டாள்தனமான சிந்தனை இல்லை என்று நான் நினைக்கிறேன்.

நானும் அது முட்டாள்தனமான எண்ணம்

(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கம் தொடர்ச்சி)

**இல்லை என்றுதான் நினைக்கிறேன். தடுமாற்றங்கள் நிறைந்த இவ்வுலகில், எந்தவிதமான காதலை நாம் நம்ப முடிகிறது?**

நான் இப்போது பேசிய இரண்டு நாடகங்களும் காதலைப் பற்றியதுதான். காதல் என்றால் என்ன என்று இரண்டு நாடகங்களும் வரையறுக்க முயலுகின்றன. நான் எழுதியது உண்மையைத்தான் என்று நம்புகிறேன். அது யதார்த்தமோ வெறும் கதையோ அல்ல. இப்படித்தான் என்னால் சற்றுப் புத்திசாலித்தனமாக உங்கள் கேள்விக்குப் பதிலளிக்க முடியும்: அது என் எழுத்தில் உள்ளது.

எழுத்தாளன் தன்னை அறிந்ததற்கும் மேலான புத்திசாலித்தனத்துடன் எழுதுகிறான். இது ஒரு பெரிய விஷயம். தலை சிறந்த இலக்கியம் தரும் பரிசு இது. என்னைப் பொறுத்தவரை காதல் என்பது தனித்துவம் நிரம்பியது. அதே சமயம் அது உலகலாவியதும் கூட. மனிதனுக்கும் இது பொருந்தும். தனித்துவமும் உலகலாவியதுமான ஒன்று முழுமையாக மனிதனுக்கு கிடைக்கிறது. ஆனால், காதலின் தனித்துவத்தை அழுத்தமான இலக்கியமாகப் படைக்க ஒருவனிடம் படைப்புத் திறன் பெருகியிருக்க வேண்டும்.

**உங்களது கட்டுரை ஒன்றில் பிரத்தியேகத் திற்கும் அந்தரத்திற்கும் வித்தியாசமுள்ளது என்கிறீர்கள். பல விஷயங்களில் பிரத்தியேக மானவை உலகாவியதாகவும் இருக்கும் சாத்தியம் உள்ளது. உதாரணமாக, முக்கோணக் காதல், வாழ்வதற்கும் சாவதற்கும் உள்ள பந்தம்... இந்த அனுபவங்கள் ஆளுக்கு ஆள் மாறியிருக்கலாம். ஆனால், அவை அடிப்படையில் அனுபவத்தின் கட்டமைப்பில்தான் இயங்குகின்றன.**

ஆம். அது உண்மைதான். நான் என் பாத்திரங்களை நபர்களாகக் கருதுவதில்லை. அவர்களை ஒருவித ஒலியாக உணர்கிறேன். இந்த சப்தம், அந்த சப்தம் என்று அவை ஒன்றையொன்று நெருங்கி இயங்குகின்றன. இரு சப்தங்களுக்கிடையே ஒருவித உறவு இருக்கிறது. அந்த உறவே இன்னொரு சப்தமாக உருக்கொள்கிறது. நான் நன்றாக எழுதும் போது இந்த ஒலிகள் ஒன்றாக ஒரு பாடலென மேலெழுந்து வருகின்றன. இன்னும் விஸ்தாரமாகச் சொல்ல வேண்டுமென்றால், ஒரு கீர்த்தனை உருவாகி விடுகின்றது.

என் நாடகங்கள் பல்வேறு இடங்களில் அரங்கேற்றம் பெற்றதற்குக் காரணமாக, என் வார்த்தைகளையும் அவற்றில் கலந்திருக்கும் தாளம் அல்லது இசையையும் சொல்ல வேண்டும். இவை ஒரு பாடலுக்கான உருவத்தைக் கொடுக்கின்றன. பல்வேறு மொழிகளில் நீங்கள் இவற்றைப் பாடலாம். நாட்டுப்புறக் கதை பாடல் (Ballad), இசை நாடகம் (Opera) போலப் பாடிக் கேட்கலாம். ஆனால், கதைகளை விட நாடகங்களுக்குத் தான் இவை பொருத்தமாக இருக்கின்றன.

**வாழ லாயக்கில்லாத ஓர் உலகில் நடமாடுபவர்களென உங்கள் பாத்திரங்கள் தோன்றக் காரணம் என்ன?**

வாஸ்தவம். ஒரு நாடக நடிகர் தான் ஏற்றிருக்கும் பாத்திரமாகவே நாடகத்தில் மாறிவிட வேண்டும். இயக்குனரும் அம்மாதிரி நிலையைத் தன் பார்வையில் கொண்டு வந்து இயங்க வேண்டும். என் எழுத்தில் நான் இதைச் செய்வதில்லை. ஒரு எழுத்தாளனான நான் நாடகக்காரனில்லை. நாடகத்தின் கலையுருவம் என்பது முற்றிலும் வேறானது. அதனால்தான் என் நாடகங்களைப் பிரசுரித்து விடுகிறேன்.

**உங்கள் நாவல்களும் நாடகங்களும் சில சமயம் ஒரே தளத்தில் இயங்குகின்றன. பேச்சுக்கும் சிந்தனைக்கும் நடுவே வேண்டுமென்றே நிதானமாக ஓர் இசைலயத்துடன் இரண்டும் இயங்குகின்றன.**

ரிதம் (Rhythm) என்று சொல்கிறோமே அது ஓவியத்திலும் இருக்கிறது. இந்த ரிதம் என்ற வார்த்தையைச் சொல்லுவது எளிது. ஆனால், அது தன்னுள் அடங்கியிருப்பது, வெளிப்படுத்துவது ஆகியவற்றை விளக்குவது கடினம். கருணை, காதல், ரிதம் - இவற்றைச் சொல்லாடல்களில் பார்க்கலாம். ஆனால், அவற்றின் அர்த்த மேன்மையைப் புரிந்துகொள்வது கடினம். ரிதம் இருக்குமிடத்தில் அதை உணருகிறீர்கள். காதலும் அப்படியே. ஏன், என்னைப் பொறுத்தவரைக்கும் கடவுளுக்கும் இது பொருந்தும். கடவுள் எங்கும் எப்போதும் இருக்கிறார் என்பது நிச்சயம். ஆனால், அவரை உணர முடிவது?

**மதிய உணவின் போது உங்களுடைய மொழிபெயர்ப்பாளர்களிடையே ஒரு வாக்குவாதம் நடந்தது. உங்கள் நடை மிக மெதுவாகச் செல்கிறது என்று. ஆனால், சிலர் - நான் உள்பட - இதை ஒப்புக்கொள்ளவில்லை. இம்மாதிரி ஒரு கருத்து உண்டானதற்குக் காரணம் என்ன?**

பதினைந்து வருடங்களாக நாடகங்கள் எழுதினேன். 'காலையும் மாலையும்' நாடகத்தின் இரு பாகங்களையும் இருமுறை பிரேக் எடுத்துக் கொண்டு எழுதினேன். இந்த இடைவெளியில் 'நெருப்பருகே ஆலிஸ்' நாவலை எழுதினேன். ஆனால், அப்போது நான் எழுதியது எல்லாம் நாடகங்கள், நாடகங்கள், நாடகங்கள்தாம். நாவலை எழுதிய போதுகூட அது நாடகம் போலத்தான் இருந்தது. 'நெருப்பருகே ஆலிஸ்', 'ஒரு கோடை நாள்' என்ற நாடகத்தை அடிப்படையாகக் கொண்டது. ஷேக்ஸ்பியரின் 'உன்னை நான் ஒரு கோடை இரவோடு ஒப்பிடவா?' என்னும் லிரிக்ஸிலிருந்து எழுந்த எழுத்து.

நான் இறுதியாக ஒரு நாடகம் எழுத வேண்டிய

நிலைக்குத் தள்ளப்பட்டேன். என் கடைசி நாடகத்தின் பெயர்: 'இந்தக் கண்கள்'. இச்சந்தப்பத்தில் நான் எங்கிருந்து வந்தேனோ அங்கேயே திரும்பிச் செல்லும் ஆர்வம் ஏற்பட்டு விட்டது - கவிதைகளும் கட்டுரைகளும் எழுத வேண்டுமென்று. 'இனி அவ்வளவுதான். எல்லாம் செய்தாயிற்று' என்று நாடகத்துக்கு ஒரு முழுக்குப் போடத் தீர்மானித்து விட்டேன்.

அச்சமயத்தில் நான் அதிகமாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். அதிகக் குடி வேறு. அதை ஒழித்துக் கட்ட நான் ஆஸ்பத்திரியில் இருக்க வேண்டியதாயிற்று. அப்போதுதான் நான் கத்தோலிக்கக் கிறிஸ்துவனாக மாறினேன். என் மனைவியை அப்போதுதான் சந்தித்தேன். பெருமளவுக்கு என் வாழ்க்கையை மாற்றிக்கொண்டு விட்டேன். படிப்பதை நிறுத்தி விட்டேன். எப்போதாவதுதான் பேட்டி கொடுத்தேன். எல்லாவற்றுக்கும் முழுக்குப் போட்டுவிட்ட நிலைதான். எப்போதாவது, ஏதாவது பரிசளிப்பு விழா என்ற கட்டாயம் ஏற்பட்டால் வெளியே வந்தேன்.

**ஆம். உங்களுக்கு நிகழ்ச்சிகளில் பங்கேற்க விருப்பம் இல்லை என்று சொன்னார்கள்.**

ஆனால், நான் ஒரு மாதிரி அலைபாயும் மனதுள்ளவன். அதனால் அதிகமாகப் பிரயாணங்களை மேற்கொண்டேன். எங்களுக்கு ஆஸ்திரியாவில், ஒஸ்லோவில், நார்வேயின் மேற்குப் பகுதியில் இரண்டு இடங்களில் தங்குமிடங்கள் இருந்தன. அங்கு மாறி மாறிச் செல்வேன். வேறெங்கும் பிரயாணம் என்பது எப்போதாவது ஒரு தடவை நடக்கும். அல்லது என் குடும்பத்துடன் செல்வேன். குடியை முற்றிலும் நிறுத்திய பிறகு, காலையில் படுக்கையிலிருந்து எழுந்திருக்கும் போது, 'எங்கே இருக்கிறேன்? டாய்லெட் இந்தப் பக்கம்?' என்ற எண்ணம் வரும்.

**முன்னிருந்த மாதிரிதான் இப்போதுமா? அல்லது ஏதோ பிளவு ஏற்பட்டு சேதமாகி விட்ட உணர்வு உள்ளதா?**

என் எழுத்தில் ஒரு தொடர்ச்சி இருந்து கொண்டிருக்கிறது. நான் பேசுவதெல்லாம் வெளியுலகை முன்னிட்டு. எழுத்து என்பது வேறு. என்னுள் உள்ள எழுத்தாளன் எப்போதும் ஒரே மாதிரியாக உலவுகின்றவன். அவன் அடக்கமும் அமைதியும் நிரம்பியவனா என்று எனக்குத் தெரியாது. ஆனால், இருப்பதென்னவோ எப்போதும் ஒரே மாதிரிதான்.

இப்போது நாம் பேசிக்கொண்டிருப்பது மெதுவே நகரும் ஆசுவாசமான எழுத்து நடை பற்றி. என்னைப் பொறுத்தவரை நாடகத்தில் அதிக வேலையில்லை. பார்வையாளரிடம் உண்மைத்தன்மையை உணர வைப்பது வெகு ஆதாரமான, எல்லையற்ற கவனத்துடன் செய்யப்பட வேண்டிய காரியம். ஒரு அடர்த்தியான படைப்பை உருவாக்குவது அதிக நேரத்தை எடுத்துக்கொள்வதில்லை. ஆனால், எழுதும் போது படைப்பாளியையும் அவனது தீவிர கவனத்தையும் அப்படைப்பு தன்பால் இழுத்துக்கொள்கிறது. மிக வேகமாக என்னால் எழுதி விட முடியும். ஆனால், மேலே சொன்ன தீவிரம் நான் எழுதும் போது என்னை ஆக்கிரமித்துக்கொள்வதையே நான் எப்போதும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன்.

என் எழுத்து, வாழ்வு, என்னைச் சுற்றியுள்ளவை எல்லாவற்றிலும் வேகத்தைக் குறைத்துக்கொள்ள ஒரு நாள் விரும்பினேன். அதன்பின் என் வசன நடை மெதுவாகச் செல்லும். நீண்ட வாக்கியங்கள் என் எழுத்தில் தோன்ற ஆரம்பித்தன. 'செப்டாலஜி' நீண்ட படைப்பு. நான் அதை நான் முடித்த போது ஆயிரத்து ஐந்நூறு பக்கங்கள் வந்திருந்தன. பிறகு சிலவற்றை எடிட்டிங் செய்தேன். நூற்றுக்கும் அதிகமான இறைசார் கட்டுரைகளை நீக்கி விட்டேன்.

**அவை அஸ்லேயின் மனைவியான அலேஸின் கருத்துக்கள் என்று நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள்.**

ஆம். சில அஸ்லேயுடனான அவளது உரையாடல்கள். மற்றவை அவளுடைய நீண்ட விரிவுரைகள். ஆனால், இப்போது யாருக்கும் அலேஸின் எண்ணங்கள், மன ஓட்டங்கள் பற்றித் தெரிய வாய்ப்பில்லை.

இன்று நான் இதைப் பற்றி யோசிக்கிறேன். நான் செய்தது சரிதானா என்று. ஆனால், எனது எடிட்டரான சிசிலி, அலேஸ் போன்ற இளம்பெண் நம்ப முடியாத அளவுக்குப் புத்திசாலியாக இருந்தது சரியாகப்படவில்லை என்று சொல்லி விட்டார். ஓரளவு நம்பக்கூடிய யதார்த்தமான சிந்தனையோட்டமாக இருக்க வேண்டும் என்று கூறி விட்டார்.

**விடுபட்ட அவற்றைத் தனியாகப் பிரசுரிக்கும் எண்ணம் உள்ளதா?**

ஆம். இருக்கிறது. ஆனால், அதற்கு முன்னால் அவற்றை மறுபடியும் படிக்க வேண்டும். அலேஸ் புத்திசாலித்தனமான எண்ணங்களைச் சிறப்பாக வெளிப்படுத்தியிருக்கிறாள். 'செப்டாலஜி' யதார்த்தமான நாவல் அல்ல. ஆகையால் அலேஸின் எண்ணக் கோவையைத் தவறாகக் கணிக்க வேண்டியதில்லை. அவற்றைக் கூற அவளால் முடியும் என்பதுதான் உண்மை. ஒருவர் மிகச் சிறந்த புத்திசாலியாக இளம் வயதில் இருக்க வாய்ப்புண்டு. அது சரியென்றோ தவறென்றோ யாராலும் சொல்ல முடியாது.

**நீங்கள் நாவல்கள் எழுதும் போது இடையிடையே மொழிபெயர்ப்புகளும்**



செய்வதாகக் கேள்விப்பட்டேன். அதிக எழுத்தாளர்கள் மொழிபெயர்ப்பில் இறங்குவது நல்லது.

மொழிபெயர்ப்பது எனக்கு மிகவும் பிடிக்கிறது. அது ஆழமான படிப்பைக் கோருகிறது. நான் இளைஞனாக இருந்த போது ஓலவ் ஹாக்கின் மொழிபெயர்ப்புகளைப் படித்தேன். 'மொழிபெயர்க்கப்பட்ட கவிதைகள்' என்பது அத்தொகுப்பின் பெயர். ஆஸ்திரியக் கவியான ஜார்ஜ் ட்ராக்கல் கவிதையை ஹாக் மொழிபெயர்த்திருந்தார். அப்போது எனக்கு ஜெர்மன் மொழி அவ்வளவாகத் தெரியாது. அதனால் கற்றுக்கொண்டேன். அந்தக் கவிதை என்னை வெகுவாக ஈர்த்தது. அதன் பிறகு ட்ராக்கல்லின் ஜெர்மன் மொழிக் கவிதைகளை வாங்கிப் படித்தேன். அக்கவிதைகளை நான் மிகவும் விரும்பியதற்குக் காரணம், ட்ராக்கல்லும் என்னைப் போலத் திரும்பத் திரும்ப அவரது எழுத்தில் தன்னை வெளிப்படுத்திக் கொண்டார். ஒரு விதத்தில் அவர் இதை என்னை விட அதிகமாகச் செய்தார் என்று சொல்லலாம். அவரது எல்லாக் கவிதைகளும் சேர்ந்து ஒரு கவிதைதான்! அவரது கவிதைகளை நான் மொழிபெயர்த்தேன். சிலவற்றை எனது கவிதைத் தொகுப்பில் சேர்த்துக்கொண்டேன்.

என்னுடைய பதின்ம வயதில் ட்ராக்கல்லை முதன்முதலாகப்படித்தேன். இப்போது இரண்டு மூன்று வருடங்களுக்கு முன்பு அவரது 'கனவில் செபாஸ்டியன்' என்ற தொகுப்பை மொழிபெயர்த்தேன். இத்தொகுப்பு கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக என்னிடம் இருக்கிறது. இந்த வருடம் அவருடைய 'இரங்கற்பா'வை மொழிபெயர்த்திருக்கிறேன்.

**நீங்கள் காஃப்காவின் 'விசாரணை'யை மொழிபெயர்த்துள்ளீர்கள்.**

ஆம். அதைப் பற்றிச் சிறந்த விமரிசனங்கள் வெளி வந்தன. மகிழ்ச்சிக்குரிய விஷயம். அதைப் பிரசுரித்த என் பிரசுரகர்த்தர் ஒரு ஜெர்மானியர். நான் மொழிபெயர்த்த ஒவ்வொரு வரியையும் ஆழமாகப் படித்துப் பார்த்து ஒப்புக்கொண்டார். ஸ்காண்டிநேவிய மொழியில் அது மிகவும் சிறப்பான மொழிபெயர்ப்பு என்று நான் நினைக்கிறேன். நான் ஒரு நாவலை முதன் முதலாக மொழிபெயர்த்தது இதைத்தான். என் சொந்தப் படைப்புகளை விட்டு விட்டு வேறு ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைத்துதான் காஃப்காவை எடுத்துக்கொண்டேன். 'விசாரணை' எனக்கு மிகவும் நெருக்கமான நாவல். கிரேக்க நாடக மேதைகளான அக்குலஸ், யியூரோபிடிஸ், சோபக்லிஸ் ஆகிய மூவரின் நாடகங்களை மொழிபெயர்த்துள்ளேன். புராதனக் குரலைக் கேட்கும் அனுபவம் இங்கு ஒருவருக்கு கிட்டும். அம்மேதைகள் தனித்த ஒரு குரலைக் கொண்டிருக்கிறார்கள். அக் குரல்களைக் கேட்டு என் மொழியில் என் வழியில் எழுதுவது எனக்கு எளிதாக இருந்தது.

**நீங்கள் ஜெரால்டு முர்னெனின் 'சமதளங்கள்' நாவலையும் மொழிபெயர்த்தீர்கள் இல்லையா?**

நான் எப்படி முர்னெனைச் சென்றடைந்தேன் என்று எனக்குத் தெரியவில்லை. நார்வேஜிய மொழியில் அவரது ஆக்கங்கள் மொழிபெயர்க்கப்படவில்லை. எங்கோ அவருடைய எழுத்தைப் படித்த போது அவர் ஒரு சுவாரஸ்யமான எழுத்தாளர் என்று நான் நினைத்தேன். 'சமதளங்கள்' பல மொழிகளில் பிரசுரமான பிரசித்திப் பெற்ற நாவல். அது சுவீடிஷ், டேனிஷ் மொழிகளிலும் பிரசுரமாயிருந்தது. எனக்கு ஆங்கிலமும் ஜெர்மனியும் தெரியுமென்றாலும் 'சமதளங்கள்' நாவலை ஸ்காண்டிநேவிய மொழியில் படிக்க விரும்பினேன். சுவீடிஷ் மொழியில் படித்தேன். எனக்கு மிகவும் பிடித்தது. அதன் பிறகு நானே மொழிபெயர்ப்பதென்று முடிவு செய்தேன்.

நீங்களும் முர்னெனும் சில அர்ப்பணிப்பு நிரம்பிய செயல்களைப் பகிர்ந்துகொள்கிறீர்கள் அல்லவா?

ஆம். ஓர் இலக்கியக் குரல் உங்களுடன் மனம்விட்டுப் பேசுவது அபூர்வமானது. அது புதியதொரு நட்பு கிடைத்து விட்டதைப் போன்றது. எப்போதாவதுதான் இது நடக்கிறது.

நீனாக்ஸ் மொழியில் எப்படி 'சமதளங்க'ளை மொழிபெயர்த்தீர்கள்?

முர்னெனிடம் தனித்தவொரு பார்வையும் குரலும் இருப்பதாக நான் நினைக்கிறேன். நான் 'சமதளங்கள்' போன்ற ஒரு நாவலைப் படித்ததில்லை. ஆனால், அது என் எழுத்தைப் போல இருக்கிறது - அருகாமையும் தொலைவும் இணைந்து செல்வது போல. நாங்கள் வெவ்வேறு விதமாக எழுதுகிறோம். ஆனால், அவ்வெழுத்துக்களுக்குப் பின்னிருக்கும் எங்கள் நோக்கு ஒத்த மாதிரியான உணர்வைத் தருகிறது.

ஒரே மாதிரியான ஒழுங்கு அல்லது ஈடுபாடு என்று சொல்லலாமா?

நான் எழுதும் போது என் எழுத்து உண்மையானதாகவும் சுருங்கச் சொல்வதாகவும் இருக்க வேண்டும் என்று பாடுபடுவேன். ஒரு கமா சரியாக விழாவிட்டால் மேற்கொண்டு செல்லமாட்டேன். அது எனக்குத் தெரியும். உதாரணமாக நான்காவது பக்கத்தில் ஒரு மாறுதலை நான் செய்தால் அது இன்னொரு இடத்தில் மாறுதலைச் செய்ய நிர்ப்பந்திக்கும். இதை நான் ஒரு பிரக்ஞையுடன் செய்வதில்லை. இம்மாதிரிப் பல தொடர்புகள் உள்ளன. நீங்கள் புகுந்து உலாவும் உலகு உங்களின் வெளி உலகிலிருந்து விடுபட்டு நிற்கிறது. உங்களுடைய சொந்த உலகை நீங்கள் உருவாக்குகையில் அது உங்களுடையது இல்லை என்பதுதான் உண்மை.

உருவத்தைப் பொறுத்த வரை அது ஒரு பேதமற்ற தர்க்கத்திற்கு அப்பாற்பட்ட ஒன்றாக இருக்கிறது.

எழுத்தாளனுக்கு அது முக்கியம் என்று நான் நம்புகிறேன். அது ஏதோ ஒன்றாக அமையக் கூடும். ஆனால், வாசகன் அதனை லாஜிக் என்று நம்புகிறான். அவசியம் ஏற்படாது எழுதுவது வீண் வேலை என்று நான் நினைக்கிறேன். அவசியம்தான் எழுத்துக்கான வீர்யத்தைத் தருகிறது. ஒரு நாவலை நான் எழுதும் போது ஆயிரக்கணக்கான விதிகள் என்னைச் சூழ்ந்துகொள்கின்றன. அவற்றை நான் பின்பற்ற வேண்டுமென்று. பெரும்பாலானவை இது இருக்கட்டும் அல்லது இது வேண்டாம் என்று சொல்பவை. இந்த விதிகளைப் பின்பற்றுவதற்கும் அவற்றைக் கேட்டுணர்வதற்கும் தேவையான ஞாபகசக்தியும் மனவலிமையும் என்னிடம் இன்னும் அதிகமாக இருக்க வேண்டும் என்று அவை பலவந்தப்படுத்துகின்றன. ஆனால், நாம் நம்மைப் பற்றி அறிந்ததை விட மேலானவர்கள்; விநோதமானவற்றை எதிர்கொள்ளும் சக்தியுடையவர்கள்.

நாவலின் பல கூறுகளைப் புரிந்துகொண்டு பரிபூரணத்தை அடைவதுதான் லட்சியமாக இருக்க வேண்டுமா?

ஆம். அனைத்துமே பரிபூரணத்தை நோக்கி இயங்குபவை. இப்பரிபூரணம் எழுத்தின் ஆத்மாவாகத் திகழ வேண்டும். பரிபூரணத்திலிருந்துதான் அதன் மௌனத்திலிருந்துதான் நமக்குச் செய்திகள் வருகின்றன. பரிபூரணத்தின் மொத்தமும் மௌனத்தைச் சார்ந்தது என்பதுதான் பரிபூரணம் வலியுறுத்தும் விதி. இத்தகைய முழுமைக்கு ஒவ்வொரு தனிப் பகுதியும் தங்கள் பங்கைச் செம்மையாக ஆற்ற வேண்டும். அமைதி இதை சாத்தியமாக வல்லது. பிரக்ஞையுடன் ஒருவர் இதைச் செய்து விட முடியாது.

இதனால்தான் நான் எதையும் திட்டமிடுவதில்லை. எதையும் முன்கூட்டியே தெரிந்துகொள்ளும் அவசியம் எதுவும் கிடையாது. ஒரு நம்பிக்கையில் நான் இயங்குகிறேன். நான் ஒரு பத்து, பதினைந்து, இருபது வரிகளை எழுதியதும் அது ஏற்கனவே எழுதப்பட்டவையாக இருக்கின்றன.

நீங்கள் சாவைப் பற்றி நினைக்கிறீர்களா?

இல்லை. அது உங்களை நெருங்குகையில் அல்லது உங்களுக்கு வயதாகி விடும் போது சாவைப் பற்றி நினைப்பது குறைந்து விடுகிறது. சிசீரோ சொன்னது போல, வேதாந்தம், சாவை எப்படி அடைவது என்பதைக் கற்றுக் கொடுக்கிறது. இலக்கியமும் அப்படித்தான். வாழ்வைப் பற்றியும் சாவைப் பற்றியும் கற்பிக்கிறது. தலைசிறந்த இலக்கியத்தைப் போன்றது சாவு. நீங்கள் உருவாக்கும் போது கலைக்கு உயிர் வருகிறது. அதை ஒரு வாசகர் மறுபடியும் உயிர்ப்பிக்கிறார். ஆனால், ஒரு முடிவாகக் கலை என்பது சவம்தான்.

"ஸிந்துஜா" <weenvy@gmail.com>

---

படைப்பாக்கம் மற்றும் விமரிசனப் பேராசிரியராக அமெரிக்கப் பல்கலைக் கழகம் ஒன்றில் பணிபுரியும் மெர்வ் எம்ரே, 'நியூயார்க்கர்' (13-11-2022) இதழுக்காக ஜான் போஸை எடுத்த நேர்காணலின் முழு வடிவம் இது. இந் நேர்காணலுக்குப் பின் சில மாதங்கள் கழித்து ஜான் போஸ் இலக்கியத்துக்கான 2023ஆம் வருட நோபல் பரிசைப் பெற்றார்.

# Killers of the flower Moon

## ஜெகநாத் நடராஜன்



அமெரிக்காவில் 1920 வாக்கில் ஓக்லஹாமா ஓஸேஜ் மாகாணத்தில் தானே பீறிட்டுக் கிளம்பிய எண்ணைய் வளத்தால், அப்பகுதியின் பூர்வ குடியினரான 'ஓசேஜ் நேசன்' (Osage Nation) என்ற செவ்வியந்தர்கள் பெரும் செல்வந்தர்களாக மாறினர். அதனையடுத்து, அந்த நிலத்தின் மீதும் வளத்தின் மீதும் அப்பூர்வ குடிகள் கொண்டிருக்கும் உரிமையைப் பறிக்கவும் அவர்களை ஒழிக்கவும், வெள்ளையர்கள் இழைத்த சதி, துரோகம், 1921 முதல் 1926 வரை செய்யப்பட்ட எண்பதுக்கும் மேற்பட்ட கொலைகள், அக்கொலைகளைக் கண்டுபிடிக்க அமைக்கப்பட்ட எஃப்.பி.ஐ. (FBI) அமைப்பு எல்லாவற்றையும் பற்றி பத்திரிகையாளர் டேவிட் கிரானால் எழுதப்பட்ட நூல், The Killers of the Flower Moon: The Osage Murders and the birth of FBI. இந்த புத்தகத்தை அடிப்படையாக கொண்டு எடுக்கப்பட்ட திரைப்படம்தான், The Killers of the Flower Moon.

இந்தப் புத்தகம் 2017 ஆம் ஆண்டின் சிறந்த பத்து புத்தகங்களில் ஒன்றாக 'டைம்' இதழால் தேர்ந்தெடுக்கப்பட்டது. மார்டீன் ஸ்கார்சஸியும் டிகாப்ரியோவும் இணைந்து இதனைத் தயாரித்திருக்கிறார்கள். அவர்கள் இணைந்து கொடுக்கும் ஏழாவது படைப்பு இது.



"எனக்கும் லியோனோர்டா டிகாப்ரியோவுக்கும் இருக்கும் பொதுவான மேனேஜர் மூலம் இந்தப் புத்தகம் எனக்குக் கிடைத்தது. படித்து பல ஆண்டுகளாக அசை போட்டுக் கொண்டிருந்தேன். கதையை எங்கிருந்து ஆரம்பிப்பது என குழம்பினேன். மீண்டும் மீண்டு எழுதிப் பார்த்தேன். காதலெனும் பெயரால், கருணையெனும் பெயரால், நட்பு எனும் பெயரால் நிகழ்ந்த இக் கொடூரத்தை அதன் தன்மை கெடாமல் எழுத சிரத்தை எடுத்துக்கொண்டேன். இது அமெரிக்கர்களுக்கு கல்லூரிகளில் சொல்லிக் கொடுக்காத பாடம். நாம் வாழ்ந்த மோசமான வாழ்விற்கு இது ஒரு உதாரணம்" என்று, இப்புத்தகம் தன்னைப் படமெடுக்கத் தூண்டிய விதத்தைக் குறிப்பிடுகிறார், இந்தப் படத்தின் இயக்குநர் மார்டின் ஸ்கார்சஸி.

'கில்லர்ஸ் ஆஃப் தி ஃப்ளவர் மூன்' என்ற தலைப்பு மிகவும் பின்னர் உருவாக்கப்பட்டது. 'மலர் நிலவு' என்பது பூர்வ குடிகளின் பஞ்சாங்கத்தில் இருந்து வந்த ஒரு சொல். இயற்கைச் சீரழிவுகளை முன்னறிவிக்கும் பஞ்சாங்கம் ஒவ்வொரு மாதாந்திர பௌர்ணமிக்கும், அது நிகழும் நேரத்தில், அந்த நிலப்பரப்பில் என்ன நிகழும்

என்பதை முன்னறிவிக்கிறது. முழு நிலவு, ஜனவரி மாதம் ஓநாய் நிலவு என்றும், பிப்ரவரி மாதம் பனி நிலவு என்றும், மார்ச் மாதம் புழு நிலவு என்றும், மே மாதம் ஃப்ளவர் மூன் என்றும் அழைக்கப்பட்டது.

மே மாதம் ஓக்லஹாமா மலையில் முதலில் துளிர்ந்து வளரும் வண்ண வண்ணப் பூக்களை, அதன்பின் வளரும் பிற தாவரங்களும் மரங்களும் மறைத்து அழிப்பதையே 'கில்லர்ஸ் ஆஃப் தி ஃப்ளவர் மூன்' என்ற தலைப்பு குறிப்பிடுகிறது.

கில்லர்ஸ் ஆஃப் தி ஃப்ளவர் மூனில் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ள நிகழ்வுகள் அனைத்தும் நிஜம். பயங்கரவாதத்தின் உச்சம். இப்போதும் ஓக்லஹோமாவின் ஓசேஜ் கவுண்டியில் என்ன நடந்தது என்பதற்கான நேரடியான விளக்கம்.

படம், ஓசேஜ் முதியவர்கள், தங்கள் சந்ததியினர் சிலர் வெள்ளை அமெரிக்க சமுதாயத்தில் இணைந்ததற்கான துக்கத்தை அனுசரித்து செய்யும் சடங்கோடுதான் ஆரம்பிக்கிறது. தொடர்ந்து எண்ணெய் கண்டுபிடிக்கப்பட, ஆனந்தக் கூத்தாடும் அவர்கள் வாழ்வில் அலங்கோலம் அரங்கேறத் தொடங்குவதை படம் அடுத்தடுத்து ஆவணப்படுத்துகிறது.

பேராசையும் தந்திரங்களும் மிக்க கிரிமினலான வில்லியம் ஹேல் என்ற ராபர்ட் டீ நீரோவின் கதா பாத்திரமே இந்த கொலைச் சம்பவங்களின் மூலம் என்று கண்டறிகிறது எஃப்.பி.ஐ.. வயதான இந்த கதாபாத்திரம், முதலாம் உலகப்போரில் ராணுவத்தில் சமையல் வேலையில் பணியாற்றி முடித்து, அடைக்கலம் தேடி தன் வாழ்வின் புதிய அத்தியாயம் நோக்கி வரும் தனது மருமகன் எர்னஸ்ட் பக்ஹார்ட் என்ற டிகாப்ரியோவின் பாத்திரத்தின் மூலம் தன் திட்டங்களை எப்படி நிறைவேற்றிக்கொள்கிறது? காதலும் மகிழ்ச்சியும் இனிமையான வாழ்வும் அமைந்த பக்ஹார்ட் எப்படி மாமா வில்லியம் ஹாலின் சூழ்ச்சிக்குப் பலியானான்? - இதுதான் இத்திரைப்படத்தின் முக்கிய பகுதி.


மார்ட்டின் ஸ்கோர்சஸி

அங்கிள் அல்லது கிங் என்று அழைக்கப் படும் தன் மாமாவைப் போலவே பெண்ணுடல் மீதும் செல்வத்தின் மீதும் தீவீர ஆசை கொண்ட பக்ஹார்ட்டிற்குள் தன் ஆசைகளையும் துரோக விதைகளையும் விதைத்துதான் சொல்வதையெல்லாம் செய்ய வைக்கிறது வில்லியம் ஹேல் கதாபாத்திரம். அவரது திட்டங்கள் சூழ்ச்சி மிக்கவை. ஆபத்தானவை.

எண்ணெய் வளம் கொண்ட நிலத்தின் உரிமையை வைத்திருக்கும், பெரும் செல்வந்தார்களாக இருக்கும் செவ்விந்திய குடும்பங்களுக்குள் ஊடுருவி, அவர்கள் குடும்பத்தில் ஒரு அங்கமாவது, பின் அந்த செவ்விந்தியர்களைக் கொலை செய்து அதை ஒரு விபத்துபோல அல்லது தற்கொலை போல நம்பச் செய்வது, சாட்சியங்களை அழிப்பது, அதாரமில்லாமல் செய்வது, கூலிப்படை வைத்து தீர்த்துக் கட்டுவது இதுவே வில்லியம் ஹாலின் திட்டம்.

இதன்படி, அந்தப் பிராந்தியத்தில் வாழும் செவ்விந்திய பெண்ணான மோலி கய்ல் என்பவளைக் காதலித்து திருமணம் செய்யுமாறு வில்லியம் ஹால் யோசனை சொல்ல, மோலியின் அழகில் மயங்கித் திரியும் வாகன் ஓட்டும் பக்ஹார்ட் உற்சாகமாகிறான். காதலித்து மோலியை மயக்குகிறான். அவளுக்கு மூன்று சகோதரிகள் உள்ளனர். மோலியை திருமணமும் செய்யச் சொல்கிறார் வில்லியம் ஹால். அதன் மூலம் அந்தப் பகுதியில் எண்ணெய் எடுக்கும் நிறுவனங்கள் அளிக்கும் உரிமைத்தொகை மற்றும் நிலத்தின் காப்புரிமை இரண்டையும் கைப்பற்ற முடியும். மோலியை திருமணம் செய்துகொள்ளச் சொன்னதோடு நிற்காமல் மோலியின் சகோதரிகள் அவர்களது கணவர்கள், மோலியின் முதல் கணவன் என்று எல்லோரும் கொல்லப்படுகிறார்கள். ஒரு குடும்பத்தைச் சுற்றிய நிகழ்வாகவே காண்பிக்கப்பட்டாலும், இது போன்ற சதித் திட்டங்களால் பல்வேறு குடும்பங்களில் எண்பதுக்கும் மேற்பட்ட பூர்வ குடிகள் கொல்லப்படுகிறார்கள்.

தனது திட்டத்தின் அடுத்த கட்டமாக மோலியைக் கொல்ல முடிவு செய்கிறார், ஹேல். மோலி கர்ப்பமுற்றிருக்கிறாள். இதனால், தயங்கும் பக்ஹார்ட்டை திட்டியும் இகழ்ந்தும் அடித்தும் தன் திட்டங்களுக்கான இசைவைப் பெறுகிறார். அவர் சொல்வதைக் கேட்டு நீரழிவு நோயாளியான மோலிக்கு இன்சுலினுடன் மார்பினையும் கலந்து செலுத்துகிறான்.

தன் குடும்பத்தில் நிகழும் தொடர் மரணங்கள் மோலியை அச்சுறுத்த, கொலைக்கார்களின் அடுத்த இலக்கு தான்தான் என்பதை அறியும் மோலி தன்னைக் கொன்று கொண்டிருப்பது கணவன் என்றறியாமலிருக்கிறாள். இக்கொலைகளை உள்ளூர் ஷெரிப் நீதிபதிகள் எந்த விசாரணையும் செய்யாமல் பார்த்துக்கொள்ளப் படுகிறார்கள். இந்தப் போக்கை விமர்சிக்கும் ஒரு ஓசேஜ் தேசத்தின் பிரதிநிதி வாஷிங்டன் டி.சி.யில் கொலை செய்யப்படுகிறார்.

தனியார் துப்பறிவாளர் வில்லியம் ஜே. பர்ன்ஸ் என்பவரை வேலைக்கு அமர்த்துகிறார், மோலி. ஆனால், அவர் எர்னஸ்ட் மற்றும் பைரன் ஆகியோரால் தாக்கப்பட்டு துரத்தப்படுகிறார்.



மோலி கடுமையாக நோய்வாய்ப்படுகிறாள். நோய்வாய்ப்பட்ட போதிலும்,ஓசேஜ் பிரதிநிதிகளுடன் வாஷிங்டனுக்குச் சென்று ஜனாதிபதி கால்வின் கூலிட்ஜிடம் உதவி கேட்கிறார். டாம் ஒயிட் என்பவரின் தலைமையிலான புலனாய்வுப் படை தங்கள் விசாரணையை தொடங்குகிறது.

ஹேல், தான் பயன்படுத்திய கூலிக் கொலையாளிகள் பலரைக் கொன்று தனது தடயங்களை மறைக்க முயற்சிக்கிறார். ஆனால், ஒயிட் அவரையும் எர்னஸ்டையும் கைது செய்கிறார். மோலி கடுமையாக நோய்வாய்ப்பட்டிருப்பதைக் கண்டறியும் மருத்துவர்கள் விஷம் கொடுத்து அவளைக் கொல்லும் முயற்சி நடந்ததைக் கூறுகிறார்கள்.

ஒயிட், ஏர்னஸ்ட் பக்காஹார்ட்டை தன் தவறுகளை ஒப்புக்கொள்ள வைத்து, ஆதாரங்களை ஹேலுக்கு எதிராக மாற்றுகிறார். அதேநேரம், ஹேலின் வழக்கறிஞர் டபிள்யூ. எஸ். ஹாமில்டன், தான் சித்திரவதை செய்யப்பட்டதாக பொய் சொல்லும்படி எர்னஸ்ட்டிடம் கூறி, அவரைத் திரும்பப் பெற முயற்சிக்கிறார். இருப்பினும், அவரது மகள்களில் ஒருத்தி கக்குவான் இருமலால் இறந்த பிறகு, எர்னஸ்ட் பக்ஹார்ட் தனது மாமாவுக்கு எதிராக சாட்சியம் அளிக்க முடிவு செய்கிறார். எர்னஸ்ட்டைக் கொலை செய்ய முயலும் ஹேல் தோல்வியுறுகிறார்.

கடைசியாக எர்னஸ்டை மோலி சந்திக்கிறாள். அவன் தனக்கு விஷம் கொடுத்ததை ஒப்புக்கொள்ளாமலிருக்க அவனை விட்டு நிரந்தரமாகப் பிரிகிறாள்., விவாகரத்து செய்கிறாள். உண்மையில் அவளைக் கொல்ல அவனுக்கு விருப்பமில்லாதிருந்தையும் சில சமயங்களில் அவளுக்குக் கொடுக்க வேண்டிய மார்பினை அவனே உண்டதையும் அவன் அவளிடம் சொல்லவில்லை.

இது நிகழ்ந்த காலகட்டத்து நியூஸ் ரீல் காட்சிகள் மற்றும் புகைப்படங்களைக் காண்பிக்க டிஜிட்டல் உத்திகள் ஏதும் பயன்படுத்தப் படவில்லை. 1917 மாடல் Bells & Howell கேமிராவையும் டிரை பிளேட் போட்டோகிராபியையும் பயன்படுத்தியிருக்கிறார் ஒளிப்பதிவாளர் ரோட்ரிகோ பிரீட்டோ. இந்த கேமிரா, ஸ்கார்சஸியின் சொந்த சேகரிப்பில் இருக்கிறது.

Oklahomaவின் பரந்து விரிந்த நிலப்பரப்பை படம் பிடிக்க, பிரத்தியேகமாக மேம்படுத்தப்பட்ட, அனமார்பிக் பேனாவிஷன் டி சீரீஸ் லென்ஸ்களின் மேம்படுத்தப்பட்ட வடிவம் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

ஆரம்பத்தில் கொலைகளைக் கண்டுபிடிக்க வரும் புனாய்வு அதிகாரி பாத்திரத்தில்தான் டிகாப்ரியோ நடிப்பதாக இருந்தது. பல்வேறு வடிவங்களில் யோசிக்கப்பட்ட திரைக்கதை முடிவாக ஒரு கட்டத்தை எட்டியபோது டிகாப்ரியோ மாற்றப்பட்டார். The Wolf of Wall Street படத்தில் கிரிமினல் கணவனாக அவர் ஏற்கனவே நடித்திருந்தார். அவரது மனைவியாக நடித்த கிளாடிஸ்டன் ஜீம் மீட்டிங்கிலேயே தேர்ந்தெடுக்கப் பட்டார்.

எரிக்ரோத்துடன் இரண்டாண்டு காலம் பயணம் செய்தும், தொடர்ந்து பேசியும் இத் திரைக்கதையை உருவாக்கியதாக எண்பது வயது ஸ்கார்சஸி சொல்கிறார், இசையமைப்பாளர். ராபிராபர்ட்சனுக்கு இப்படம் சமர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது. இது இக் கூட்டணியின் பதினோராவது படம்; மற்றும் கடைசிப் படமும் கூட. ராபி காலமாகிவிட்டார்.

“ஜெகநாத் நடராஜன்” <jaganathanvr4@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

ஓவியம்: **நடேஷ்**



## 24. மௌன சாட்சிகள்

ஒரு கையால்
உவகையோடு
உடமையல்லாத
உடலைத் தழுவியபடி
மறுகையால்
ரகசியமாக
நழுவவிடப்படும்
மோதிரம்,
முதுகு காட்டித்
திருப்பி வைக்கப்படும்
புகைப்படங்கள்,
இறுக மூடப்பட்ட
திரைச் சீலைகள்
எல்லாமும்
முதல் முறை
இப்படி நிகழ்கிறபோது
எப்படியிதைப் புரிந்துகொள்வதென
எண்ணிக் குழம்பியவாறே
இரட்டைக் கட்டிலில் புரளும்
வெற்றுடம்புகளை
வெறித்துப் பார்த்துக்கொண்டிருக்கின்றன.

வழக்கமில்லாத
அவ் வழக்கமும்
பழகிப் பழையதான பின்
அடுத்த கூடலை எதிர்நோக்கி
பசித்திருக்கும்
வேட்டை நாய்களின்
விழிகளோடு
அசைவின்றிக் காத்திருக்கத் தொடங்குகின்றன



## 25. காளையும் கரடியும்

“உச்சமெய்துகிறதா?
ஆமாவா?
மேலும் வாய்ப்புள்ளதா?
ஆகா!”

முகமெங்கும் குதூகலம் நெக்குவிட
நிதி ஆலோசகரிடம்
அலைபேசிக்கொண்டிருக்கிற உதடுகளை
மெல்ல முத்தமிட்டுப்
பின்
ஓங்கி அறைந்து
காதுகளில் கிசுகிசுக்கத் தோன்றிய
“என்னை ஒரு நாளாவது
கேட்டிருக்கிறாயா?”
எனும் கேள்வியைப் புறந் தள்ளி
அவன் மிச்சம் வைத்திருந்த
மதிய உணவையும்
அடுத்த நொடி ஒலித்த
“மா, சூடா ஒரு காபி”
எனும் குரலோடு சேர்த்தெடுத்து
மட்கும் குப்பைகளிடும் பைக்குள்
கவனமாய்க் கொட்டியபடி
மூன்று பர்னர்கள்கொண்ட
நவீன சமையலறைக்குள்
நுழைகிறாள்.

தொடரும்

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# பூசா

**கன்பரா யோகன்**
**ஓவியம்: ரமா சுரேஷ்**

நான் ஆலடிச் சந்தியில் காரை நிறுத்திவிட்டு பிரதான வீதியிலிருந்து கெவர் போலப் பிரிந்து செல்லும் தார் போட்ட ஒழுங்கை வழியே நடந்தேன். மழை அரித்துப் போட்ட குழிகள் திருத்தப்படாமல் கிடந்தன.

பாசிபிடித்துக்கறுத்துகிடந்தமதில்வீடொன்றைத் தாண்டியபோது கம்பிப் படலைக்கு உள்ளிருந்து பெரிய மண்ணிற நாயொன்று திடீரென்று குரைத்து நெஞ்சை உதற வைத்தது.

மதில் வீடுகளைக் கடந்ததும் ஒழுங்கை மடங்கித் திரும்பி குருமணல் பாதையாக மாறி, ஒடுங்கி சிறுத்துக்கொண்டே போய் இடப்புறம் திரும்பி, சரிவில் இறங்கிக்கொண்டே சென்றது. மதில் வீடுகள் மெல்ல மறைய கொட்டிலில் வீடுகள் வர ஆரம்பித்தன.

முப்பது வருசத்துக்கு முன்னால் அனேகமாக பூவரசங் கதியால், வேலிகள் கிடுகு அல்லது பனை ஓலையால் வேய்ந்திருந்தன. அவையும் உக்கி விழுந்து கொட்டில் வீடுகள் பின்னால் தெரியும். இப்போது அவ்வேலிகளில் சில மதில்களாக மாறி பின்னால் சிறிய ஓட்டுக் கூரைகள் தெரிந்தன.

பூசாவின் கொட்டில் வீட்டை கண்டுபிடிப்பது இலகுவாகத்இருக்கப்போவதில்லைஎன்றுதெரிந்தது. கம்பியில் சைக்கிள் ஓட்டும் சேர்க்கஸ் வித்தைக்காரன் போல மணலில் சைக்கிள் ஓட்டி வந்த ஒருவனை நிற்பாட்டி பூசாவின் வீடு எங்கே என்று கேட்டேன். அவன் தெரியாது என்று சொல்ல வாயெடுக்குமுன், "வேல் மரக்காலை தவகுமார். இப்ப உயிரோடே இல்லை" என்று விளக்கிச் சொன்னேன்.

தென்னிலங்கையின் கடற்கரையோரமாக செல்லும் காலி வீதியை அண்மித்திருக்கும் பூசா இராணுவ முகாமின் பெயரைக் கேள்விப்படாத தமிழர்கள் அந்நாட்களில் மிகக் குறைவு. ஆனால், பூசா என்ற பட்டப் பெயர் தவக்குமாருக்கு இருந்தது அப்போது ஆலடியில் எவருக்கும் தெரியாது. ஏனென்றால், அந்தப் பட்டத்தை அவனுக்கு வழங்கியவர் தோம்பன் வளவில் கள்ளிறக்கும் கிளியர்.



கிளியரின் கள்ளுக்கு அப்போது டிமாண்ட் இருந்ததால் தோம்பன் வளவு என்ற பெயர் குடிகாரருக்கு தெரியும். தோம்பன் வளவு என்றால் அது ஒரு தனிக்காணி அல்ல; ஒரு முப்பது சீவல் தொழிலாளிகளின் குடும்பங்கள் வாழும் பகுதிக்கே அந்தப் பெயர் வழங்கி வந்தது.

அங்கே தொழில் செய்யும் பலர் இருந்தாலும் கிளியரின் கள்ளுக்காகவே ஐந்தாறு மைல்களுக்கு அப்பாலிருந்தெல்லாம் வருவார்கள். ஆலடியிலிருந்து பூசா மூன்று மைல் சைக்கிள் ஓடி தோம்பன் வளவுக்கு வருவான். எனக்கு வீட்டிலிருந்து சைக்கிளில் போனால் ஐந்து நிமிடம்தான்.

ஒருமுறை ராணுவத்திடம் அகப்பட்டு பூசா வரை சென்று மீண்டதை கிளியரிடம் சொல்லியதிலிருந்து கள்ளுக் கொட்டிலில் பூசா என்பது அவன் ஆகு பெயராகிவிட்டது.

எண்பத்தெட்டு அல்லது எண்பத்தொன்பதாம் வருடம் மார்கழியில் நல்ல மழை பெய்தது. மார்கழியில் மயிர் நனையாத் தூறல் என்பது பொய்த்தது. மழைக்குப் பிறகு பனைகளில் புது ஊற்று தொடங்கும் வரை கள்ளு விற்பனை மாரி காலத்தில் மந்தமாகவே இருந்தாலும், கிளியருக்கு குறைந்தது நாலைந்து குடி மகன்கள் நாள்தோறும் வந்துகொண்டுதானிருந்தனர். கிளியரின் பெறா மகன் பெரியதம்பி கால்முறிந்து இரண்டு மாதமாக மரமேறாமல் பாயில் கிடந்தான். அவனுடைய நாலு பனைகளையும் கிளியர்தான் சீவிக்கொண்டிருந்தார்.

அன்றைக்கு மழைக்குப் பின் எறித்த பளிச்சென்ற வெயில். சமையலறையில் அம்மா மழையில் நனைந்த ஈர விறகை ஊதி பற்ற வைப்பதில் சலித்துப் போய் கண்டபடி என்னைத் திட்டிக் கொண்டிருந்தாள். தாழ்வாரத்தில் அடுக்கி வைத்திருந்த காய்ந்த விறகுகள் முடிந்து போனதால் பின் வளவில் பட்டுப் போய் நின்ற பூவரசைத் தறித்துக் கொத்தி தாழ்வாரத்தில் அடுக்கும்படி நீண்ட நாட்களாக கேட்டுக் கொண்டிருந்தாள். நானும் கடத்திக் கொண்டிருந்தேன்.

அடுத்த பாட்டம் மழை பெய்யத் தொடங்குமுன் என்ன செய்யலாம் என்று யோசித்து விட்டு கிளியரிடம் போவோம் என்று சத்தம் போடாமல் சைக்கிளை எடுத்தேன். சைக்கிள் முன் சில்லு டயர் தேய்ந்து வாழைப்பழம் போலக் கிடந்தது

கிளியர் வீட்டு படலையை திறந்து சைக்கிளில் ஓடியே அவர் வளவின் எல்லையிலிருக்கும் கொட்டிலுக்குப்



போவோம். தூரத்தில் கொட்டிலை மறைவாக வைத்திருக்குமளவுக்கு அவரது காணி பெரியது.

கிளியருக்கு இருபத்தைந்தாவது வயதில் மூத்தவள் பிறந்து பத்தாவது மாதத்தில் தனது பனைகளைப் பெரியதம்பியிடம் ஒப்படைத்து விட்டு சவுதிக்குப் போனார். நாலு வருடங்கள் அங்கு உழைத்த பிறகு ஊருக்கு வந்து பக்கத்து வளவு மாரிமுத்துவின் காணியை வாங்கி வேலியைப் பிரித்து ஒரே வளவாக்கினார். மாரிமுத்துவின் வளவில் நின்ற உயரிப் பனையும் வேறு எட்டுப் பத்து மரங்களும் அவரது கைக்கு வந்தன. அதற்குப் பிறகு அவர் ஊரை விட்டுப் போகவில்லை.

சைக்கிளை கொட்டிலுக்கு முன்னே சைட் ஸ்ராண்டில் விட்டேன். மழை ஈரத்தில் ஸ்டாண்ட் புதைந்து சைக்கிள் சரிந்து நின்றது. விழுந்து விடுமோ என்று கொஞ்ச நேரம் நின்று பார்த்து விட்டு விழாதென்று தெரிந்ததும் போனேன்.

அப்பச்சி மாமாவின் சி-நைண்ட்டி கிளியரின் மாட்டுக் கொட்டிலில் நின்றது. மாடுகள் மேயப் போயிருந்தன.

பதினொரு மணிக்கே கள்ளுக் கொட்டிலில் ஆட்கள் நின்றனர். அடாது மழை பெய்தாலும் ஆட்கள் வராது விடுவதில்லை. தலைவர் பாட்டுச் சத்தம் கேட்டது. எதிரே அப்பச்சி மாமாவும் சகலரும் கைதட்டி தாளம் போட்டுக் கொண்டிருந்தனர். ஒட்டிப் பிறந்த இரட்டையர்கள் போல அவர்கள் ஒருபோதும் தனித்து வருவதில்லை. இருவரும் அக்கா, தங்கையை கட்டியிருந்தார்கள். அப்பச்சி மாமாவுக்குத்தான் அவர் சகலர். உண்மைப் பெயர் தெரியாததால் எங்கள் எல்லாருக்கும் அவர் சகலர் ஆகிவிட்டார்.

கொட்டிலுக்கு உள்ளே பானா வடிவில் போட்டிருந்த பனங்குற்றிகளில் ஆட்கள் இருந்தனர். தலைவர் நிலத்தில் அமர்ந்திருந்தார். அவர் எப்போதும் நிலத்தில் அமர்ந்து பனங்குற்றியில் முதுகைச் சாய்த்துக்கொள்வார். அவர் பெயரும் எனக்குத் தெரியாது. ஆனால், அவர்தான் அங்கே பாட்டுக்குத் தலைவர்.

“இழுத்து பாடு தலைவா! என்ன இண்டைக்கு உன்ரை குரல் கமறுது.”

நார் கட்டிய கள்ளு முட்டியுடன் கொட்டிலுக்கு வந்தபடியே கிளியர் சொன்னார். அவர் எல்லா முட்டிகளையும் கொட்டிலுக்குள் வைத்திருப்பதில்லை.

பொருள் முடிய முடிய வீட்டின் அரைச்சுவரின் பின்னால் மறைத்து வைத்திருக்கும் அடுத்த முட்டியை கொண்டு வருவார்.

செம்மண் போட்டு எழுப்பி சாணி மெழுகிய அரைச் சுவர் வைத்த கொட்டில் வீட்டுக்கும் கள்ளுக் கொட்டிலுக்கும் நடுவில் உயரிப்பனை நின்றது.

கிளியர் பனையேறுவதற்கு வசதியாக சாரனை மடித்து தடித்த பெல்ட் ஒன்றை இடுப்பில் கட்டியிருந்தார். ஏறுபெட்டியும் தள நாரும் அதில் கொழுவியபடியே இருந்தன. சுருண்ட தலை முடி; கட்டையான உடல் என்றாலும் கோயிலிலுள்ள சூரனின் மரச்சிலை போல மரம் ஏறி ஏறி இறுகி திரண்ட கட்டான உடம்பு; தள நார் உராய்ஞ்சிக் காய்த்த கால்கள்; அடி வயிற்றிலும் பனை உரோஞ்சித் தடித்த கண்டிப் போன தோல்.

“பொருளைக் குடும் கிளியர். அப்பவெல்லோ தலைவருக்கு குரல் திறக்கும்” என்றார் அப்பச்சி மாமா. வெள்ளைச் சேர்ட்டும் கோடு போட்ட கிப்ஸ் சாரமும் அணிந்திருந்தார், மாமா.

இதுதான் தருணமென தலைவர் சிரட்டையை நீட்டினார்.

“வாங்கி வாங்கி குடி! காசை மட்டும் தராதை என்ன!?” முகத்திலடித்தது போலச் சொன்னார் கிளியர்.

அது தலைவருக்கு கோபத்தை மூட்டவில்லை

தலைவர் கட்டிட வேலைக்கு மேசனுக்கு முட்டாளாகப் போய் வந்தார். ஆனால், மழை காலத்தில் கட்டிட வேலைகள் ஒன்றும் இராது. பஞ்சப்பாடு தான். என்றாலும் தவறாமல் கொட்டிலுக்கு காலையிலேயே வந்து விடுவார். பாட்டுக்கு இடையில் யாராவது கள்ளு வாங்கிக் கொடுப்பார்கள். வேலையில்லாத நாட்களில் கோயில்களில் இரவுக் கூத்துக்கு பிற்பாட்டுக்குப் போனார். அதுவும் மழைக்காலம் வந்தால் இராது.

மதியானக் கள்ளுக்கு வரும் யாராவது மீன்பிடிகாரர் கொண்டு வரும் பாரைக் கருவாட்டை பதமாகச் சுட்டுப் பகிர்ந்து கொடுப்பது அவர்தான் என்பதால் கருவாட்டுத் தலைவர் என்ற பட்டப் பெயரும் இருந்தது.

கருவாடு சுட என்று கிளியரின் கொட்டிலுக்குப் பின்னால் பத்தி இறக்கியிருந்த மறைவிடத்தில் தலைவர் அடுப்புக்கல்லு வைத்திருந்தார்.

பாறி விழுந்த பனையின் வெட்டிப் போட்ட அடிக் குற்றித் துண்டம் ஒன்றில் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்த கள்ளுச் சிரட்டையை எடுக்க வெளியே போனேன். சிரட்டைகளில் செட்டி அட்டைகள் ஏறியிருந்ததைக் கிளியரிடம் சொன்னேன்.

“சீ சனியனே மழை வந்தால் இந்தச் சவங்களும் வந்திடும்.”

பாளைக் கத்தியின் பிடியால் கிளியர் சிரட்டைகளைத் தட்டி விழுத்தினார். செட்டிகள் மண்ணில் விழுந்து சுருண்டன. நடுவில் கறுப்பும் கரையில் மஞ்சலும் கொண்ட அட்டைகள் மீண்டும் நீண்டு ஊரத் தொடங்கும் வரை அவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

கிளியர் போய் கட்டை வடலியின் கைக்கெட்டின ஒலையை வெட்டி பிளா கோலி வந்தார்.

பிளாவை வாங்கிகொண்டு பாத்திரம் ஏந்திய பிச்சைக்காரன் போல நான் பனங்குற்றியில் அமர்ந்தேன். கிளியர் முட்டியிலிருந்த கள்ளை நாரை பிடித்து பிளாவில் பக்குவமாக ஊற்ற பச்சை ஓலையின் மணமும் கள்ளின் மணமும் சேர்ந்து மூக்கை நிறைத்தது. ஒரு மிடறு குடித்தேன். அது வயிறு வரை குளிர்ந்து செல்வதை உணர்ந்தேன்.

பூசா அப்போதுதான் வந்து சைக்கிளை நிறுத்தினான். அடை மழை வரப்போகுது என்று சொல்லிக்கொண்டே கொட்டிலுக்குள் வந்தவனின் சுருட்டைத் தலை மயிரில் மரத்தூள் ஒட்டியிருந்தது. பூசா சொந்தமாக மரக்காலை ஒன்றை அப்போதுதான் திறந்திருந்தான்.

அறுத்த மரங்களை மொத்த விலைக்கு வாங்கி கதவு நிலை யன்னல்கள் அடிக்கும் ஆசாரித் தொழில். ஆலடியில் இன்னொரு மரக்காலை முதலே இருந்தது. பூசா புதிதாக வேல் மரக்காலை திறந்ததில் ஏற்பட்ட தொழில் போட்டியிலேயே பூசாவை ராணுவத்துவத்திடம் தலையாட்டி மூலம் மாட்டி விட்டதாக ஆலடியில் ஒரு கதை உலாவியது.

“என்ன பூசா மழைக்குப் பூரான் வெளிக்கிட்ட கணக்கு இண்டைக்கு வந்திட்டாய்” என்றார் கிளியர் குத்தலாக.

நீண்ட நாட்களாக பூசா கிளியரிடம் வரவில்லை.

“புது வீட்டுக்கு அச்சாரம் வேண்டின கையோடை சாராயப் போத்திலோடை வாறன் எண்டாய். பிறகு இந்தப் பக்கம் காணேல்லை.”

என்னதான் திறமான கள்ளு வித்தாலும் கிளியர் தான் சீவின கள்ளைக் குடிப்பதில்லை. அவர் குடிப்பதெல்லாம் சாராயம்தான். அதுவும் இப்படி ஓசியில் யாராவது கொண்டு வந்தால் மட்டுமே.

“ஒண்டும் சரி வரேல்லை கிளியர்” என்றான் பூசா. உண்மையில் வீட்டுக்கு அச்சாரம் கொடுத்து விட்டார்கள்.

கடதாசிப் பையில் சுற்றி இடுப்புக்குள் மறைத்துக் கொண்டு வந்த சாராய போத்தலைக் கிளியருக்கு சொல்லவேண்டாமென்று கண்ணை காட்டி அப்பச்சி மாமாவிடம் இரகசியமாகக் கொடுத்தான், பூசா. அரைச் சுவரின் பின்னால் குனிந்து முட்டிகளை

மழைத்தண்ணீரில் கழுவிக் கொண்டிருந்த கிளியருக்கு இது தெரியவில்லை.

வெளியே வந்த படி, "பொருள் முடிஞ்சுது. வீட்டை போ பூசா" என்று பூசாவிடம் கிளியர் முறைப்பாகச் சொன்னார்.

"பொருளாவது! முடியிறதாவது!" பூசா சிரித்தபடி சேட்டுப் பொக்கற்றில் கையை விட்டு பீடியை எடுத்தான்.

"இஞ்சொண்டா" தலைவர் பீடியைக் கேட்டார்.

"இஞ்ச பேந்தும் பார்."

"கிளாசைக்கொண்டு வாரும் கிளியர், இண்டைக்கு பூசாவின் உபயம்" என்றவாறே ஒளித்து வைத்திருந்த கடதாசிப் பையிலிருந்து சாராயப் போத்தலை எடுத்து உயர்த்திப் பிடித்தார், அப்பச்சி மாமா.

"எடேய் பூசா எனக்குத் திறுக்கீஸ் விட்டுட்டாய் என்ன?"

கிளியர் திட்டிக்கொண்டே ஆனால், உள்ளுக்குள் புழுகத்துடன் கிளாசை எடுக்கப் போனார்.

அரைவாசிக்கிளாஸ் மட்டத்துக்கு எல்லோருக்கும் சாராயம் ஊற்றப்பட்டது. கள்ளில் தொடங்கி சாராயத்தில் முடித்தவர்கள் பறக்கத் தொடங்கினர். மற்றவர்கள் மிதக்கத் தலைப்பட்டனர்.

மழை சடசடத்தது. தலைவர் பாடத்தொடங்கினார். கண்டசாலா, ஜெயராமன் காலத்துப் பாட்டுக்கள். சகலரும் அப்பச்சி மாமாவும் பீடியை பற்ற வைத்துகொண்டனர். மழை தூறி பின் பெருத்துப் பெய்தது. கொட்டிலுக்குள் மழை ஒழுக கிளியர் எதோ எடுத்து வைக்க என்று சொல்லிக்கொண்டே வீட்டுக்கு ஓடினார்.

தலைவர் கூத்துக்கு பாட்டுக்குத் தாவினார்.

தத் தாங்கிட தருகிட திமிதக தா தாகிட தாகிடதோம் தரி

ராஜா ராஜ ராஜர் போற்றும் ராஜ மகா ராஜன் வந்தான்

ராஜ தீரன் கொலுவில் வந்தானே

எனக்கு மழையைக் கண்டால் நனைந்தே ஆக வேண்டும். அப்போது அப்பிடி ஒரு விசர்க்குணம். பிளேன் போல கைகளை விரித்துக்கொண்டே மழைச் சாரல்களுடே ஓடினேன். பின்னால் பூசாவும் வந்தான். அவன் சேர்ட்டைக் கொட்டிலில் கொழுவி விட்டே வந்தான். கிளியரின் பின் வேலியில் ஒரு ஆள் குனிந்து போகக்கூடிய பொட்டுக்குள்ளால் வேலிக்குப் பின்னாலிருந்த வயல் கிணத்துக்குப் போனோம். வரம்பு மட்டுமே தெரிய வயல்களெல்லாம் வெள்ளக் காடாயிருந்தது.

பிறகுதான் மாமா சகலருடன் வந்தார். தலைவரும் மற்றவர்களும் கொட்டிலை விட்டு வரவில்லை.

அப்பச்சி மாமா சாரத்தை உரிந்து விட்டு உள் களிசானுடன் வயல் வெள்ளத்துக்குள் நின்று வீசாணம் போட்டார்

தாம் த தகிட தகிடதோம் தீம் த திகிட திகிட தெய்

அன்று அவருக்கு நல்ல ஏத்தம். எங்களை முந்திக்கொண்டு அவரே கிணத்துக்குள் குதித்தார். மாரி காலக் கிணறு முதல் படிக்கல்லை மூடி முட்டிப் போயிருந்தது.

பூசா காற்சட்டையைக் கழற்ற மினக்கட்டான். படிக்கல்லை ஒருவாறு தேடிப் பிடித்து அதில் காலை வைத்து கிணற்றுக் கட்டைப் பிடித்துக் கவனமாக இறங்கினான். பிறகு முகத்தை ஓணான் போல வைத்துக்கொண்டு ஒரு சுற்று நீந்தியபின் மேலே ஏறினான்.

"சிவா குதியடா குதியடா" என்று உள்ளிருந்து அப்பச்சி மாமா என்னைப் பார்த்துக் கத்தினார். நான் படிக்கக்கட்டில் நின்று காற்சட்டையை கழற்றிக் கொண்டிருக்கையில் சகலர் பின் பக்கமாக வந்து கிணற்றுக்குள் என்னைத் தள்ளிவிட்டார். கீழேயிருந்து மாமா சைகை காட்டியிருக்க வேண்டும்.

மழை கொட்டிக் கொண்டிருந்தபோதும் கிணற்றுத் தண்ணீர் இதமான சூடாக இருந்தது.

அது முதலில் பாசி நிறத்தில் இருந்தது பிறகு கொஞ்சம் கொஞ்சமாக கலங்கி வெள்ளைப் பச்சையாக மாறியது. எல்லாருக்கும் குதிக்கும் ஆசை வந்துவிட்டது. வேட்டியை கொடுக்குக் கட்டியிருந்த சகலர் குத்துக் கரணம் அடித்தார். பிறகு மேலேறி வந்த அப்பச்சி மாமா தேரை குந்தியிருப்பது போல கிணற்றுக் கட்டில் இருந்துகொண்டு கையைக் கூப்பியபடி தண்ணீரைத் துளைப்பது போலச் சத்தமில்லாமல் நைசாக விழுந்தார். அவர் கீழே போய் மேலே வந்ததும் பூசா கைகளைக் கட்டிக்கொண்டு பனங்குற்றி போல கால் குத்தென நிமிர்ந்தபடி தண்ணீருக்குள் விழுந்தான். அது விசித்திரமான குதிப்பாக தெரிந்தது.

எனது முறைக்காக வந்து படிக்கட்டில் நின்றேன். குதித்தவுடன் நிலம் தெரியாத ஆழத்துக்கு கீழே போகும் பயத்தால் எனக்கு எப்போதும் குதிப்பது திகிலாகவே இருக்கும்.

ஆனால், யாரும் தள்ளிவிட முதல் குதித்து விட வேண்டும்.

தண்ணீருக்குள் மீன் கொத்துவது போல மழைத்துளிகள் உடம்பில் குத்தியபடி விழுந்து கொண்டிருந்தன. பூசா மேலே வரும் வரை பார்த்திருந்தேன்.

அரை நிமிடம் கழிந்தும் பூசா மேலே வரவில்லை. குமிழிகள் மேலெழுந்து வந்தன. பிறகு பூசாவின் கை மேலே வந்தது. விபரீதம் நிகழ்ந்துவிட்டதா அல்லது

விளையாட்டுக்கு பூசா நாடகமாடுகிறானா என்று முதலில் தெரியவில்லை.

கிணற்றுக்குள்ளிருந்து அப்பச்சி மாமா,“அவன்ரை கையை பிடி பிடி” என்று என்னிடம் கத்தினார்.

அவன் மணிக்கட்டை எட்டிப் பிடித்தேன். என் பிடியிலிருந்து பூசாவின் கை வழுக்கிக்கொண்டே கீழே போனது. என்னால் முடியவில்லை.

எல்லாமே மெதுவாக நிகழ்வது போல இருந்தது. மூளை எதையும் விரைவாக செய்யச் சொல்லாமல் சற்றுத் தாமதமாகவே ஆணை பிறப்பிப்பது போலிருந்து.

அப்பச்சி மாமாவும் எதோ சொல்கிறார். தெளிவில்லாமல் கேட்கிறது.

ஆனால், பூசாவுக்கு எதோ நடந்துவிட்டது தெரிந்தது. அப்பச்சி மாமா தண்ணீருக்குள்ளே சுழியோடினார். நானும் சகலரும் கிளியரிடம் ஓடினோம்.

அது நீண்ட தூர ஓட்டம் போலிருந்தது ஆனால், அது ஒரு முப்பதடி தூரமும் இருக்காது. அவருக்கு சொல்லி அவர் வடக் கயிற்றைக் கொண்டு வருவதற்குள் பூசா மூச்சடங்கி கீழே போய்விட்டான்.

கயிற்றை விட்டு கிளியரும் அப்பச்சி மாமாவும் அவனைத் தூக்க நான் போய் அப்பச்சி மாமாவின் மோட்டர் சைக்கிளை ஒழுங்கை வழியாக வயற்கரைக்குக் கொண்டு வந்தேன். கொட்டிலில் இருந்தவர்களுக்கு ஒன்றுமே தெரியாத போதையிலும் மழையின் இரைச்சலிலும் இவையெல்லாம் ஐந்து நிமிடங்களில் நடந்தேறி விட்டன.

தலைவரின் பாடல் தொடர்ந்து கொண்டிருந்தது.

வீர வீர வீரர் எல்லாம்

வந்தடி பணியும் வீரன்

வீர தீரன் கொலுவில் வந்தானே

தா தாங்கிட தரிக்கிட திமிதக தா தாங்கிட தாகிடதோம் தரி

நான் மோட்டர் சைக்கிளை ஓட்ட, பின்னால் அப்பச்சி மாமா பூசாவை நடுவில் இருத்தி வைத்துக்கொண்டு, வாகை மரச் சந்தியிலிருந்த சுந்தரம் பிள்ளையின் மருந்துச் சாலைக்கு கொண்டு போனோம். உடல் சரிந்து விழுந்து கொண்டிருந்தால் பூசாவை அப்பச்சி மாமாவின் மடியில் கிடத்தி காலைத் தொங்கப் போட்டபடி கொண்டு போவதை விட வேறு வழியில்லை.

நல்ல வேளை சுந்தரம் பிள்ளையிடம் நோயாளிகள் எவரும் இல்லை.

பூசாவைத் தூக்கி கட்டிலில் கிடத்தும் போதே சுந்தரம் பிள்ளைக்கு தெரிந்துவிட்டது. கடமைக்கு கையை பிடித்துப் பார்த்துவிட்டு கையை விரித்தார்.

மழை நின்று ரோட்டுக் கரையெங்கும் வெள்ளம் பாய்ந்து கொண்டிருந்தது. சந்தியில் நின்ற கார்க்கார பெடியன் இந்திரனை ஓடிப்போய் கூட்டி வந்து பூசாவை ஆலடிக்கு கொண்டு போக வேண்டும் என்று சொன்னேன்.

முதலில் ஏற்றத் தயங்கி, “மாட்டன் அண்ணை” என்றான்.

பின்னால் வந்த அப்பச்சி மாமா கையை ஓங்கியதைக் கண்டதும் பயந்து விட்டான். சுற்று முற்றும் பார்த்து விட்டு, “ஏத்துங்கள்” என்றான்.

சவத்தை ஏற்றினால் பிறகு சவாரிக்கு ஆட்கள் வராது போய் விடுவார்களோ என்ற பயம்.

ஆலடியை நெருங்க நெருங்க எனக்கு இதயம் பலமாக அறைந்து அறைந்து அடித்தது. ஒரு வேளை நான் முதலில் மழைக்குள் ஓடியிருக்கா விட்டால் இதெல்லாம் நடந்திருக்காதோ? வழியெங்கும் என்னை நானே கேள்வி கேட்டு வதைத்துக்கொண்டேன்.

பூசாவின் கொட்டிலுக்கு முன்னால் காரை நிறுத்திவிட்டு அப்பச்சி மாமா இறங்கி மரப் படலையைத் திறந்து உள்ளே விசயத்தைச் சொல்லப் போனார். கூனிய அவர் முதுகைப் பார்க்க எனக்கு கண் கலங்கியது.

நான் நெஞ்சு நடுங்க முன் சீற்றிலெயே இருந்தேன். ஒரு பெருங் கூக்குரல் கேட்டது. நொடிப்பொழுதில் அயலிலுள்ளோர் கூடிவிட்டனர். அவர்களில் ஒருவன் கோபத்துடன் ஓடி வந்து அப்பச்சி மாமாவை கீழே தள்ளி காலால் உதைத்தான்.

தூக்கி நிறுத்தி வைத்து மாமாவுக்கு சரமாரியாக அடிகள் முகத்திலும் விழுந்தன. இன்னொருவன் காரை நோக்கி வந்து என்னை வெளியே இழுத்தெடுத்து முகத்தில் ஓங்கி குத்தினான்.

கார்க்கார இந்திரன் எங்கோ நழுவி ஓடி விட்டான். கீழே விழுந்தபடி என் பல்லைத் தொட்டுப் பார்த்தேன். கை முழுவதும் இரத்தம்.

பாய் படுக்கை என்று வருத்தமேதுமில்லாமல் சுக தேகியாகவிருந்த பூசாவை பிணமாகக் கொண்டுபோனதை அவர்கள் நம்பத் தயாரில்லை. நாங்கள்தான் ஏதோ செய்துவிட்டோம் என்று எண்ணியிருப்பார்கள்.

இதற்கிடையில் அப்பச்சி மாமா எப்படியொ விஷயத்தை விளங்கப்படுத்தி விட்டார் போலும். அடி உதை நின்றது. இருவர் பூசாவை காரிலிருந்து தூக்கிக்கொண்டு போய் வெளித் திண்ணையில் கிடத்தினார்கள். அழுகுரல் அதிகரித்தது.

மைம்மல் பொழுதில் சைக்கிளை எடுப்பதற்காக கிளியரின் கொட்டிலுக்குப் போனேன். இருள் கவிந்து வண்டுகளின் இரைச்சல் கேட்கத் தொடங்கிவிட்டது. கொட்டிலில் எவருமில்லை. கிளியர் பனை ஏறப்

போய்விட்டார். தலையே போனாலும் அதை தவற விடமாட்டார்.

பூசா கொண்டு வந்த சாராயப் போத்தல் அவனது செருப்புக்குப் பக்கத்தில் வெறுமையாக நிலத்தில் கிடந்தது.

கொழுவியிருந்த பூசாவின் சேட்டை எடுத்தேன் பொக்கட்டுக்குள் தொய்வுக்கு அடிக்கும் வென்ரோலின் பம் கிடந்தது. அவ்வளவு விரைவாக பூசா மூச்சடங்கிப் போனதுக்கு தொய்வு காரணமாகி இருக்கக் கூடும் என்று எனக்கு அப்போதும் தெரிந்திருக்கவில்லை.

அப்பச்சசி மாமா பின்னால் மோட்டர் சைக்கிளில் வந்தார். கன்னம் வீங்கியிருந்தது.

"சேர்ட்டைத் தாடா; சைக்கிளையும் கொண்டு போயி குடுத்திட்டு வாறன். வேறை என்ன விட்டிட்டுப் போனவன்?"

செருப்பையும் சேர்ட்டுடன் கொடுத்தேன்

"அடிக்க மாட்டாங்களே மாமா?"

"இல்லைத் தா!. இந்த அறுவான் தொய்வுக்காரன் மாரிக் கிணத்துக்கை ஏன்ரா இறங்கினவன்?"

நான் அந்த வேலிப் பொட்டைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அதன் ஊடே வயல் வெள்ளம் மங்கிய வெளிச்சத்தில் பால் விட்ட தேநீரின் நிறத்தில் தெரிந்தது.

முன் பல்லு விண்ணென்று வலித்தது.

அன்றிரவு ஏழு மணிக்கே வீட்டுக்கு நான் வந்ததை அம்மா புதினமாகப் பார்த்தாள். சொக்கலிங்கம் கடையில் சாப்பிட்டு விட்டேன் என்று பொய் சொல்லிவிட்டுப் போய்ப் படுத்தேன்.

காலை சூரிய வெளிச்சம் வரு முன்னே தோம்பன் வளவில் குடிக்கப் போய் ஒருவன் கிணற்றில் விழுந்து செத்து போனான் என்று ஊரில் இந்த விஷயம் பரவிவிட்டது. கொஞ்ச நாட்கள் வெளியில் தலை காட்ட முடியவில்லை. வீட்டிலும் அம்மா என்னோடு கோபத்தில் கதைக்காது விட்டாள்.

அம்மா, ஆரிடமோவெல்லாம் கெஞ்சி மண்டாடி காசைப் புரட்டி கொழும்பு மாமாவின் உதவியுடன் இந்தியாவில் படிப்பதற்கு ஒழுங்கு செய்தாள்.

அடுத்த வருட நடுப்பகுதியில் நான் பொறியியல் படிப்புக்காக பெங்களூருக்குப் போனேன். படிப்பை முடித்து தொழில் தேடி சிங்கப்பூர் போய் பிறகு மலேசியாவில் நிரந்தரமாகக் குடியேறினேன்.

அங்குள்ள பாம் ஓயில் தொழிற்சாலையில் வேலை செய்து கொண்டிருந்த காலத்திலேயே திருமணமும் அங்கேயே நிகழ்ந்தது. பிள்ளைகளை லண்டனுக்கு அனுப்பிப் படிப்பித்தேன். அவர்கள் அங்கேயே நிரந்தரமாகத் தங்கி விட்டனர்.

இந்த முப்பது வருடங்களில் பாம் ஓயில் சம்பந்தமான மகாநாடு ஒன்றுக்காக கொழும்புக்கு ஒரு முறை வந்து போனதைத் தவிர ஊருக்கு நான் வரவேயில்லை.

கொட்டில் வீடுகளின் நடுவே தெரிந்த ஒரு சிறிய கல் வீடுதான் பூசாவின் வீடு. உள்ளே நாயொன்று குரைத்தபடி வரவேற்றது. நாயின் குரல் கேட்டு உள்ளிருந்து ஒரு நடுத்தர வயதுப் பெண் வெளியே வந்தாள். அது பூசாவின் மனைவிதான் என்று அறிந்துகொண்டேன்.

நான் பூசாவின் நண்பன் என்று என்னை அறிமுகப்படுத்தினேன். கொஞ்சநேர இடைவெளியின் பின் அன்று கிளியரின் வீட்டிலிருந்து பூசாவைக் கொண்டு வந்தவர்களில் நானும் ஒருவன் என்றேன்.

பூசாவின் மனைவி தலையை குனிந்த படி மௌனமாக நின்றாள். அவள் தலையை நிமிர்ந்த போதும் முகத்தில் எந்த மாற்றத்தையும் காண முடியவில்லை. முப்பது வருடம் ஒரு நீண்ட காலம் என்பதை அவள் முகம் உணர்த்தியதாகப் பட்டது.

பேச்சை மாற்றுவதற்காக வீட்டை கண்டு பிடிக்க முடியவில்லை என்றேன்.

அந்த பழைய கொட்டில் வீட்டிலிருந்து இங்கு வந்து பதினைந்து வருசமாகிவிட்டது என்றாள். மகன் பிரான்சுக்கு போனதில் இந்தக் கல் வீடு கட்ட முடிந்தது என்று சொல்லிக்கொண்டே, "வேணீ" என்று உள்ளே பார்த்து மருமகளைக் கூப்பிட்டாள்.

குங்குமப்பொட்டுவைத்த இளம்பெண்ணொருத்தி இடுப்பில் பிள்ளையைத் தூக்கிக்கொண்டு உள்ளிருந்து வந்து பிள்ளையை கீழே இறக்கி விட்டாள்.

அந்த மூன்று வயதுப் பெண் குழந்தை என்னிடம் நேரே ஓடி வந்தது. நான் பெயரைக் கேட்டேன். அது உடனே என் பல்லை பார்த்துவிட்டு, "என்ன மாமா பவுண் பல்லு" என்றது.

அன்று அடித்து உடைந்த பல்லு பிறகு பழுப்பு நிறமாகி ஆட்டங்கண்டு கொதி வலி காண நான் அதை பிடுங்க வேண்டி வந்தது. கோறைப் பல்லின் இடத்தில் பதிலாக பொன் முலாம் பூசிய பல்லு கட்டியிருந்தேன்.

குழந்தை என்னை விடாமல், "ஏன் மாமா பவுண் பல்லு கட்டினீங்கள்?" என்றது.

"பல் விழுந்துவிட்டது" என்றேன்.

"எனக்கும் இரண்டு பல்லு விழுந்துவிட்டது" என்றபடி வாயை ஆவென்று காட்டியது. பிறகு என் பவுண் பல்லை பார்த்து தலையைச் சரித்து ஓட்டைப் பல் தெரியச் சிரித்தது.


கன்பரா யோகன்

<chelliahsolomonyoganantham@gmail.com>

தருமமிகு சென்னை–5

# திவ்ய தேசத்தின் இஸ்லாமிய உலகம்

## சந்தியா நடராஜன்

மெரினா கடற்கரையை ஒட்டி அமைந்திருக்கும் திருவல்லிக்கேணி சென்னையின் மிகப்பெரிய வைணவத் தலம். தென்கலை வைணவர்களின் ஊனும் உயிருமாய்க் காட்சியளிக்கிறார் பார்த்தசாரதிப் பெருமாள். பார்த்தசாரதி மீசையுடன் தரிசனம் தரும் இத்திருக்கோயில் வைணவர்களின் 108 திவ்ய தேசங்களில் ஒன்று. பன்னிரு ஆழ்வார்களில் பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், திருமங்கை ஆழ்வார் ஆகிய மூவர் பாசுரங்களால் பெருமைபெற்ற மண் திருஅல்லிக்கேணி. ‘ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாட மாமயிலைத் திருஅல்லிக்கேணி’ என்று திருமங்கை ஆழ்வார் திருவல்லிக்கேணிப் பெண்களைப் போற்றுகிறார்.

‘வேதத்தை வேதத்தின் சுவைப் பயனை
விழுமிய முனிவரர் விழுங்கும்
கோது இல் இன் கனியை நந்தனார் களிற்றை
குவலயத்தோர் தொழுது ஏத்தும்
ஆதியை அமுதை என்னை ஆள் உடை
அப்பனை......................’

என்று பெருமாளைப் போற்றி அவரை, ‘திருவல்லிக்கேணியில் கண்டேன்’ என்று பாடுகிறார் திருமங்கை ஆழ்வார் (மூன்றாம் திருமொழி - 2)

பார்த்தசாரதிக்குப் பக்கத்தில்தான் பாரதியும் குடியிருந்தான்.

இப்படித் துளசியும் கற்பூரமும் எப்போதும் மணந்துகொண்டிருக்கும் திருவல்லிக்கேணியின் வைணவக் கோயிலைச் சுற்றியுள்ள சந்து பொந்துகள், பிரதான வீதிகள் எங்கும் இந்துக்களோடு இஸ்லாமியர்களும் இரண்டறக் கலந்து தத்தம் கலாசாரங்களுடன் வாழ்ந்து வருகிறார்கள்; வணிகம் செய்கிறார்கள்.



‘பிக் ஸ்ட்ரீட்’ என்ற பெரிய தெரு முனையில் கரீம் பாய் என்ற திமுககாரர் வெற்றிலை சீவல் கடை நடத்தி வந்தார். சென்னைக்கு வந்த புதிதில் மாயவரத்து வெற்றிலை சீவல் நாகரிகத்தைச் சென்னையில் தொடர வழிவகுத்துக் கொடுத்தவர் கரீம் பாய் அல்லவா! அவருடன் நெருங்கிய சிநேகம் உண்டானது. அப்துல்லாவுக்கும் அமாவாசைக்கும் என்ன சம்பந்தம் உண்டு என்று கேட்பார்கள். பெரிய தெருவில் அந்த சம்பந்தம் உண்டு என்று மெய்ப்பிப்பவர் கரீம். அவரது வாடிக்கையாளர்கள் எல்லாம் நீறு நிறைந்த நெற்றியுடன் வருபவர்களும் பார்த்தசாரதி பக்தர்களும்தான்.

ஒரு விதத்தில் வைணவர்களுக்கும் இஸ்லாமியர்களுக்கும் மத ரீதியாக நெருங்கிய தொடர்பு இருக்கிறது என்று சொல்ல இடமிருக்கிறது. இஸ்லாம் ஏக இறைக்கொள்கையைக் கடுமையாகக் கடைப்பிடிக்கிற மதம்.‘கடவுள் இல்லை - அல்லாவைத் தவிர’ என்கிற வாசகம் திருக் குர் ஆன் வசனங்களில் மீண்டும் மீண்டும் வெளிப்படுகிறது. ‘அல்லாஹ் - அவனைத் தவிர வணங்குதற்குரிய நாயகன் வேறு இல்லை’ என்கிறது திருக் குர் ஆனில் ஆயத்துல் குர்ஸி எனும் இறைவசனம். இஸ்லாத்தில் அல்லாஹ்வுக்கு இணையுமில்லை; துணையுமில்லை.

இதே ரீதியில்தான் வைணவமும், ‘நாராயணனே நமக்கு’ என்று உறுதிபடக் கூறுகிறது. ஏகாயன வேதம் என்கிற ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தின் ஆகமமான பாஞ்சராத்ரம், ஸ்ரீமந் நாராயணனைத் தவிர இதர தெய்வங்களைச் சாராதே என்று திட்டவட்டமாகக் கூறுகிறது. வைணவர்கள் ‘மறந்தும் புறந்தொழா மாந்தர்கள்’ என்று உரக்கச் சொல்கிறார் திருமழிசை ஆழ்வார். (நான்முகன் திருவந்தாதி-68). அதாவது நாராயணின் திருநாமம் மறந்துபோனாலும் போகலாம். ஆனால், அவர்கள் புறசமயக் கடவுள்களை வணங்கமாட்டார்கள்.‘மற்றுமோர் தெய்வம்






சேக்கடம்

உளதென்று இருப்பாரோடு உற்றிலேன்' என்று பிரகடனம் செய்கிறார் திருமங்கை ஆழ்வார் (பெரிய திருமொழி 8:10:5). இதுமட்டுமல்ல, சரணாகதிதான் வைணவத்தின் உயிர்நாடி. இஸ்லாம் என்றால் சரணடைதல் என்ற பொருளும் உண்டு.

மத நல்லிணக்கத்திற்காகவோ என்னவோ ஸ்ரீரங்கம் போன்ற வைணவக் கோயில்களில் 'துலுக்க நாச்சியார்' சந்நிதிகளை நிறுவியிருக்கிறார்கள். திருவல்லிக்கேணியும் அப்படித்தான் மத நல்லிணக்கப் பூமியாக இருந்து வந்தது.

1990 செப்டம்பர் 2ஆம் தேதி இந்த வரலாறு திசை மாறியது.

இந்து முன்னணி போன்ற அமைப்புகள் வேர் பிடித்து வளரத் தொடங்கிய காலகட்டம். 1990இல் விநாயகர் சதுர்த்தி மத அரசியலுடன் இணைவு பெற்றது. அந்த வருடம் அல்லிக்கேணியில் தொடங்கிய விநாயகர் ஊர்வலம் ஐஸ் ஹவுஸ் பள்ளிவாசலை நெருங்கியபோது சலசலப்பும் பதற்றமும் அந்தப் பகுதியைப் பற்றிக்கொண்டன.

பள்ளிவாசலில் தொழுகை. பக்கத்தில் கொட்டுகள் முழங்க விநாயகர் ஊர்வலம். இரு தரப்புக்கும் இனம் புரியாத உரசல். இஸ்லாமியர்களுக்கு எதிராக ஊர்வலத்தினர் கோஷம் எழுப்பிச் சென்றதாக ஒரு தரப்பினர் குற்றம் சாட்டினர். ஊர்வலத்தின் மீது செருப்பு வீசப்பட்டதாக மற்ற தரப்பு ஆவேசம். கடைசியில் கடலில் மூழ்கப் போன விநாயகர் கலவரத்திற்குக் காரணமானார்.

ஐஸ் ஹவுஸ் பகுதியிலிருந்து வதந்தி வாலாஜா சாலை வரை பரவியது. தீ வைப்பு, சோடா பாட்டில் வீச்சு, கடைகளைச் சூறையாடுதல் என வன்முறையின் எல்லா முகங்களையும் திருவல்லிக்கேணி அன்று கண்டுகொண்டது. இவையனைத்தையும் அறியாமல் சேப்பாக்கம் கிரிக்கெட் விளையாட்டு மைதானத்தில் கூடியிருந்த கூட்டம் கிரிக்கெட் ஆட்டத்தில் களித்திருந்தது. அக்கூட்டத்தில் எனது நண்பர் இசாக்கும் அவரது சகாவான வரதராஜனும் இருந்தனர்.

ஆட்ட அரங்கத்தில் அல்லிக்கேணியில் அமளி துமளி என்ற செய்தி பரவ ஆரம்பித்தது. இசாக், வரதராஜனுடன் வீடு திரும்ப வாலாஜா சாலையிலிருந்து திருவல்லிக்கேணி சாலைக்கு வந்தபோது அந்தச் சாலை காவல்துறைக் கட்டுப்பாட்டில் இருந்தது. திருவல்லிக்கேணிக்குச் செல்லும் எல்லாச் சாலைகளும் போலீசாரால் மூடப்பட்டுவிட்டன. இசாக்கின் வீடு ரத்னா கஃபேக்கு அருகில் இருந்தது.

62 தேவராஜ் முதலி தெருவில் இருந்த இசாக்கின் வீடு திருவல்லிக்கேணியின் தொன்மை வாய்ந்த வாழ்விடங்களில் ஒன்று. சிங்கப்பூரில் வசிக்கும்

இசாக்கின் சகோதரர் இசாக்கைவிடப் பன்னிரண்டு வயது மூத்தவர். அண்ணன் சொல்கிறார், அவரது குடும்பத்தின் பூர்வீக சொத்தான அந்த வீடு 1835இல் கட்டப்பட்டது என்று.

கிரிக்கெட் ஆட்டம் பார்க்கப் போன இசாக்கும் வரதராஜனும் வீடு வந்து சேர முடியவில்லை. இறுதியாக இராயப்பேட்டை வழியாகச் சென்று சந்து பொந்துகளில் புகுந்து இசாக் வீட்டை அடைந்தனர். இரவின் இதயத்தில் மத துவேஷ அச்சம் குடிகொண்டது. சோடா பாட்டில்கள் மேற்படி பழம்பெருமை கொண்ட வீட்டின் மீது பறக்கத் தொடங்கின.

திருவல்லிக்கேணியின் சரித்திரத்திற்கும் கலாசாரத்திற்கும் பங்கம் நேர்ந்த இரவில் தொடங்கியது விநாயகர் ஊர்வலப் பதற்றம். பல அரசியல்வாதிகளின் பெயர்களும் மதவாதிகளின் பெயர்களும் அன்றைய இரவில் வதந்திகளாகவும் உண்மையாகவும் ஊர்ந்தும் மறைந்தும் உலவி வந்தன. அதில் ஒரு பெயர் குள்ள சேகர்.

இசாக்கின் தந்தை சென்னை சுங்கத் துறையில் 1950களில் அதிகாரியாகச் சேர்ந்த ஷேக் ஆடம். பிறகு சுங்கத்துறையின் சீஃப் இன்ஸ்பெக்டர் ஆனார். அவரது காலத்தில் இந்தப் பதவியின் அதிகார எல்லைக்கு அளவே இல்லை.

ஷேக் ஆடத்திற்கு இரு சகோதரர்கள். ஒருவர் ஷேக் அகமது. இவரும் மத்திய அரசுப் பணியில் உதவி ஆணையராக இருந்தார். மூத்த சகோதரரான முகமது அலி திரைப்படத் துறையில் தடம் பதித்தவர். ஏ.எஸ்.ஏம் (ஏ எஸ் முகமது அலி) என்று அறியப்பட்டவர். 'பானு ஃபிலிம்ஸ்' என்ற திரைப்பட நிறுவனமும் நியூடோன் ஸ்டுடியோவும் முகமது அலி மற்றும் அவரது உறவினர்களால் உருவாக்கப்பட்ட நிறுவனங்கள். நியூடோன் ஸ்டுடியோதான் கைமாறிக் கைமாறி எம்ஜிஆரிடம் வந்து சேர்ந்து சத்யா ஸ்டுடியோவாக உருப்பெற்றது. இவர்கள் குடும்பத்தினர் தயாரித்த படங்களில் ஒன்று ஹாத்தி மிட்டாய். பத்மினி சகோதரிகள் இவர்கள் வீட்டு சுப நிகழ்வுகளில் தவறாது கலந்துகொள்வார்கள் என்கிறார் இசாக்கின் சகோதரர். திரைப்படத்துறையில் புகுந்து வளமிழந்தவர்கள் வரிசையில் இசாக்கின் முன்னோர்களும் இடம் பிடித்திருக்கிறார்கள் என்று உணர முடிகிறது.

இசாக், எஸ்.எம். என்டர்பிரைசஸ் என்ற நிறுவனத்தை நடத்தி வருகிறார். அந்த நிறுவனம் வெளிநாட்டிலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதியாகும் பொருள்களையும் இந்தியாவிலிருந்து வெளிநாடு களுக்கு ஏற்றுமதியாகும் பொருள்களையும் உரிய சோதனைகளுக்கு உட்படுத்த உதவும் சுங்கத்துறை அனுமதி பெற்ற நிறுவனம். தந்தை பணி புரிந்த இலாகாவுடன் தொடர்புடைய பணியில் நிற்கிறார் இசாக்.



1835 இல் கட்டப்பட்ட வீட்டுக்கான ஓலைப்பத்திரம்

இசாக்கின் தாய்வழித் தாத்தா டி.ஏ. முகமது இப்ராகிம், திருவல்லிக்கேணி நெடுஞ்சாலையில் 'இப்ராகிம் பிரஸ்' என்று ஓர் அச்சகத்தை நடத்தி வந்தார். திரைப்படத் துறையில் உறவு கொண்டிருந்த இவர், 'ஸினிமா டாக்கீஸ்' என்ற ஒரு மாத இதழையும் நடத்தி வந்திருக்கிறார். அநேகமாக இந்த இதழ் தமிழ் சினிமா பத்திரிகைகளின் முன்னோடி அல்லது முதல் பத்திரிகையாக இருப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது.

வல்லிக்கண்ணன் கோவையிலிருந்து வெளிவந்த 'சினிமா உலகம்' என்ற பத்திரிகையில் பணிபுரிந்திருக்கிறார். பக்கிரிசாமி செட்டியார் என்பவர் அப்பத்திரிகையை நிறுவியவர். 1935இல் தொடங்கப்பட்ட 'சினிமா உலகம்' தமிழின் முதல் சினிமா பத்திரிகை என்று, 'நிலைபெற்ற நினைவுகள்' என்ற தனது சுயசரிதையில் பதிவு செய்திருக்கிறார் வல்லிக்கண்ணன்.

'ஸினிமா டாக்கிஸ்' இதழின் மூன்றாவது இதழ் அட்டைப் படத்தை இசாக் எனக்கு அனுப்பியிருக்கிறார். கி.பி 1936 அந்தப் பத்திரிகையின் மூன்றாவது ஆண்டு என்று தெரியவருகிறது. இதை வைத்துக் கணக்கிடும்போது ஸினிமா டாக்கிஸின் முதல் இதழ் 1934 ஜனவரி மாதத்தில் வெளிவந்திருக்கும்.

ஆக, 'சினிமா உலகம்' இதழுக்கு முந்தைய இதழாக 'ஸினிமா டாக்கிஸ்' இருந்திருக்க வேண்டும். எனக்கு அனுப்பியிருந்த 'ஸினிமா டாக்கிஸ்' இதழின் அட்டைப்படம் சென்னையில் உள்ள ரோஜா முத்தையா நூலகத்தின் இணையதளத்தில் கிடைத்ததாக இசாக் சொன்னார். (ரோஜா முத்தையா நூலகத்திற்கு நன்றி.)

இந்த இதழை அச்சிட்டு வந்த இப்ராகிம் பிரஸ் அமைந்திருந்த இடத்தில் தற்போது ஏ.ஆர். தாவூது என்ற இசைக்கருவிகள் விற்பனை செய்யும் கடை இயங்கி வருகிறது. சித்தார், வீணை வாங்க விரும்புவோர்கள் இந்தக் கடைக்குச் செல்லலாம்.



திரைப்படத் தயாரிப்பாளர் முகமது அலி



இப்ராஹிம் சாப்

இவ்விரண்டு இசைக் கருவிகளுக்கும் பெயர் வாங்கியிருக்கிறது இந்தக் கடை. தாவூது, பெயர் பெற்ற சித்தார் மாஸ்டராக வாழ்ந்திருக்கிறார். அவரது வழித்தோன்றல் கரீம் இசைபட இசைத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்.

ஷேக் ஆடம் குடும்பத்தின் இன்னொரு உறவுக் கிளையும் திருவல்லிக்கேணி நெடுஞ்சாலையின் அடையாளமாக உள்ளது. ஹாஜி எம்.ஏ. சாகுல் ஹமீது புத்தகக் கடை தான் அது. நெடுங்காலமாக இஸ்லாமிய மார்க்க நூல்களை அச்சிட்டும் விற்பனை செய்தும் வருகிறார்கள் சாகுல் ஹமீது பரம்பரையினர். இந்தப் புக்கக் கடை ஆதாம் மார்க்கெட்டுக்கு எதிரில் உள்ளது. இந்தக் கடை இயங்கிவரும் கட்டடம் சென்னையின் மரபுசார் கட்டடங்களில் ஒன்று.

திருவல்லிக்கேணி இஸ்லாமியர்களும் அசைவ உணவருந்தும் மாற்று சமூகத்தினரும் விரும்பிச் செல்லும் உணவகங்கள் நிறையவே உண்டு. அவற்றில் பிரபலமானவை சீலாட், பிர்தோஸ், ஐஸ்வரவுஸ் தாஜ் ஹோட்டல். சி.என்.கே. சாலையில் உள்ள எக்ஸெல் மற்றும் வீட் ஹோட்டல். இவை அனைத்தும் மலையாளிகளால் நடத்தப்பட்டவை.

திருவல்லிக்கேணியிலிருந்து திரும்பி அண்ணாசாலைக்கு வந்தால் சாந்தி தியேட்டருக்கு அருகில் உள்ள புகாரி ஹோட்டலும் பிலால் ஹோட்டலும் நெல்லைப் பகுதி இஸ்லாமியர்களுக்குச் சொந்தமானவை. புகாரி ஹோட்டல் உரிமையாளரின் சொந்த ஊர் கேம்லாபாத். பிலாலும் புகாரியும் சென்னையின் நடுநிசி உணவகங்கள்.

அக்காலத்தில், பொதுவாக இத்தகைய ஹோட்டல்களில் குடும்பத்துடன் வருபவர்களுக்கென்று தனியே தடுப்புகளுடன் கூடிய இடங்கள் இருந்தன. இவை பெண்களுக்கான பிரத்யேகப் பகுதிகள்; சின்ன 'தள்ளு' கதவுகளுடன் கூடியவை. நிசிசரர்களுக்கும் உணவளித்து வந்த இந்த ஹோட்டல்கள் தமது பழைய ரூபங்களை மாற்றிக்கொண்டு நவீன முகப்புடன் நவீன ஒளி வெளிச்சத்தில் தங்களை தரம் உயர்த்திக் கொண்டுள்ளன. 'தள்ளு கதவுகள்' தகர்க்கப்பட்டு விட்டன. சர்வ சுதந்திரத்துடன் ஆண்களும் பெண்களும் நடுநிசி உணவை விரும்பி வருகிறார்கள்.

எல்லாச் சமூகங்களும் விட்டு விடுதலையாகி விட்டன.

(தொடரும்)

சந்தியா நடராஜன்
<sandhyapathippagam@gmail.com>

# டி. கண்ணன் கவிதைகள்

ஓவியம்: ஞானப்பிரகாசம் ஸ்தபதி



1.

காலம் சிலரைக்
குரங்காக மாற்றுகிறது
சிலரைக் கனியாக...
சிலரைக் கிளியாக

குரங்கு கனியை
பிய்த்துத் தின்கிறது

குரங்குகள் கனிகளை
குரங்குகளாக்கின்றன
கனிகளுக்கு
சாமர்த்தியம் போதவில்லை

தப்பிப் பறக்கின்றன
கிளிகள்

## 2. செல்லம் கொஞ்சல்

காதலியோடு 'செல்லம்' கொஞ்சிக் கொண்டிருந்தேன்
பிரிந்து போய் விட்டாள்

நண்பர்களோடு'செல்லம்' கொஞ்சிக் கொண்டிருந்தேன்
எண்ணிக்கை குறைந்து கொண்டிருக்கிறது

ஊரில் வயல்களோடும் மரங்களோடும்
'செல்லம்' கொஞ்சிக் கொண்டிருக்கிறேன்
அழித்துக் கொண்டிருக்கிறார்கள்

குடியோடு பல காலமாக 'செல்லம்'
கூப்பிடும் பொதெல்லாம் ஓடி வருகிறது



விளையாட்டுக்களுடனும்
இசையோடும்
புத்தகங்களுடனும்
'கறார்' நிலைப்பாடு
விசுவாசமாய் இருக்கின்றன

தற்போது
உடலோடு 'செல்லம்' கொஞ்சத் தொடங்கியிருக்கிறேன்
காத்திருக்கிறேன்...

## 3. காலமும் முதிர் கன்னியும்

வீட்டின் உள்ளிருந்து
வெளியே ஓடும் வீதியை பார்த்துக் கொண்டிருக்கிறேன்
இடையில்தான் எவ்வளவு கதவுகள்
அவள் என்னை பார்த்தவாறே தெரு கடந்தாள்
என்று அனுமானித்தவாறு
சற்றே எழுந்தமர்ந்தேன்
அவளைத் தொடர்ந்து காலமும் வீதி கடந்தது
போனது 'சும்மா' போகாமல்
அவளின் வயதையும் சொல்லி
அவளையும் இழுத்துச் சென்றது

## 4. தொலைதலின் ஞாபகம்

பெயர் மறந்து விட்ட வருடமொன்றில்
வசந்தம் முன்போல் இல்லை
மாரியில் அதிகம் மழை
இரு நதிகளும் புரண்டோடின
மார்கழியில் கடும் குளிர் ஊர் நுழைந்தது
அவசரமாய் தொடங்கிய கோடை
அதிக வெப்பம் கண்டது
பெரு நதி சுருங்கி மறைந்து கொண்டிருந்தது

அந்த வருடம்தான் அவனும்
ஊரிலிருந்து தொலைந்து போனான்

ஆயிற்று வருடங்கள்

அவன் தொலைந்து போனதைத்தான்
ஊர் நினைவில் வைத்திருக்கின்றது
இன்றும்...

## 5. தொலைதலும் மறைதலும்

ஓர் மழைநாளிதான் அவன் நதியில் மூழ்கித் தொலைந்தான்
என்றார்கள் சிலர்
அவர்களே
சித்திரைத்தேர்பஞ்சுப்பொதிஅவனைவிழுங்கியிருக்ககூடும்
என்றார்கள்

நாதஸ்வர கோஷ்டி 'கல்யாணி'யோடு வீதி வலம் வர
அவனைக் கடைசியாக பார்த்ததாக
பலூன் வியாபாரி கவலை தெரிவித்தார்
அவனின் பெரிய சகோதரன் தான்
'சூன்யம்' வைத்து அவனைத் தொலைய விட்டதாக
மாடத்தெருவில் பேசிக் கொண்டார்கள்

தேவாங்குகளைத் தேடி
அவனாகவே தொலைந்தான் என்று
குறவர்கள் செய்தி பரப்பினார்கள்

அவன் தொலைவது முதன் முறையல்ல
இப்போதுதான் நீங்கள்
முதன்முறையாக தேடுகிறீர்கள்
என்றார் குடும்ப ஜோதிடர்

தேடும்போது கிடைக்காத ஜாதகம் அவனுடையது
என்று மேலுமுரைத்தார்

"டி. கண்ணன்" <krishnaswamy164@gmail.com>

## வடக்கில் இந்திய வம்சாவழி மலையக மக்கள்

# கரைக்கப்படாத துயரத்தின் நிழல்

**கருணாகரன்**

தமிழ்நாட்டுக் கிராமங்களில் வறிய நிலையிலிருந்த விவசாயக் கூலிகள், 1823இல் பிரித்தானியர்களால் இலங்கைக்குக் கொண்டு செல்லப்பட்டு 200 ஆண்டுகளாகிறது. இதையொட்டி 'மலையகம் 200' என்ற பொருளில் பல்வேறு வகையான உரையாடல்களும் காட்சிப்படுத்தல்களும் நிகழ்கின்றன. இவை இலங்கையிலும் இலங்கைக்கு வெளியே புலம்பெயர் சூழலிலும் நிகழ்கின்றன. இது இந்த மக்களுடைய வரலாற்றையும் வாழ்வையும் அவர்களுடைய வலியையும் அந்த மக்களும் பிறரும் அறிந்துகொள்வதற்குப் பல வகையான சாத்தியங்களை அளிக்கின்றது.

ஆனால், இதைப் பற்றிப் பேச வேண்டிய இன்னொரு பிராந்தியமான இந்தியாவில் கனத்த மௌனமே நிலவுகிறது. கோவையில் 22.10.2023இல் 'மலையக, தாயகம் திரும்பிய தமிழருக்கான இயக்கம்', 'மலையகம் 200 - பன்னாட்டுக் கருத்தரங்கம்' ஒன்றை நடத்தியுள்ளது. தமுஎக சங்கம் ஒரு நிகழ்வை ஏற்பாடு செய்வதாக அறிய முடிகிறது. அவ்வளவுதான். அதற்கப்பால் வேறெந்த நிகழ்வும் நடப்பதாகத் தெரியவில்லை.

இந்தியச் சூழலிலும் முறையான உரையாடல்களும் இந்த வரலாற்றின் காட்சிப்படுத்தல்களும் நிகழ வேண்டும். அப்படி நிகழும்போதுதான் இந்த மக்களின் வாழ்க்கையிலும் வரலாற்றிலும் புதிய திருப்பங்கள் நிகழ்வதற்கான சாத்தியப்பாடுகள் அதிகரிக்கும். இந்த வரலாற்றைப் பற்றிய முழுமையான சித்திரத்தையும் நாம் எட்ட முடியும்.

இந்த மக்கள் 200 ஆண்டுகளாக இலங்கையின் மத்திய பகுதிகளில் உள்ள மலையகப் பகுதிகளில் வாழ்கின்றனர். வாழ்கின்றனர் என்று சொல்வதை விட வேலை செய்யும் இயந்திரங்களாகப் பாவிக்கப்படுகின்றனர் என்றே சொல்ல வேண்டும். இலங்கையின் மலையகப் பகுதிகளில் அவர்கள் தோட்டத் தொழிலாளர்கள் ஆக்கப்பட்டனர். இதற்கிடையில் நிகழ்ந்த பயணத்திலும் மலைப் பகுதிகளை தோட்டங்களாக்கும்



போதும் ஏராளம்பேர் இறந்து விட்டனர். அந்த இறப்புகளுக்கு எந்தவிதமான மதிப்பும் அடையாளமும் இல்லை. இன்னும் மலையகத்தில் அந்த மக்கள் மிக நெருக்கடியான - உரிமையற்ற வாழ்க்கையையே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். நிலம் கிடையாது. அதனால் அவர்களுக்கு சொந்தமாக வீடில்லை. ஏன், மலசல கூடத்தைக் கூடத் தங்களுக்கென்று அமைத்துக்கொள்ள முடியாதிருக்கின்றனர். அவர்களுடைய குடியிருப்புகளுக்குச் செல்லும் வீதிகள் புனரமைக்கப்படுவதில்லை. சரியான பாடசாலைகளில்லை. இப்படிப் பல அவலங்கள். பல வகையான துயரங்கள்.

இன வன்முறைகள் காரணமாக இவர்களில் ஒரு தொகுதியினர் இலங்கையின் வட பகுதியில் பின்னாளில் குடியேறியுள்ளனர். இவர்களை விட இன்னொரு தொகுதியினரும் வடக்கிலே நீண்டகாலமாக உள்ளனர். இவர்களைக் குறித்தெல்லாம் யாரும் பெரிய அளவில் கவனம் கொள்ளவில்லை. இப்போது நிகழும் 'மலையகம் 200' என்ற உரையாடல்களில் கூட இவர்களைக் குறித்த அவதானம் குறைவாகவே உள்ளது. ஆகவே இவர்களைக் குறித்து வரலாறு தன்னுடைய கவனத்தைக் கொள்ளத் தவறுகிறது. அதற்கான அக - புறக் காரணங்கள் வலுவாக உண்டு. இந்தச் சிறுகட்டுரை அதை முழுமையாக ஆராயவில்லை. இது ஒரு சுருக்கக் குறிப்பாகும். ஆனால், இந்தக் கட்டுரையாளர் அதைக் குறித்து தன்னுடைய நூலொன்றில் விரிவாகப் பேசியுள்ளார்.

### வட பகுதியில் இந்திய வம்சாவழி மக்களுடைய / மலையக மக்களின் அடையாளம், வாழ்நிலை:

வடக்கிலே, கிளிநொச்சி உள்ளிட்ட வன்னிப் பிராந்தியத்திலேயே இந்திய வம்சாவழியினர் அல்லது மலையக மக்கள் அதிகமாக வாழ்கின்றனர். (இவர்களில் பெரும்பான்மையானோர் இப்பொழுது தம்மை இந்திய வம்சாவழி மக்களாக அழைக்கப்படுவதையோ மலையக மக்கள் என்று கருதப்படுவதையோ விரும்பவில்லை. ஆனாலும் இவர்களை



இன்னும் தனித்துப் பார்க்கும் பார்வை - விலக்கிப் பிறத்தியாராகப் பார்க்கும் வார்வை - யாழ்ப்பாணத்திலும் வன்னியிலும் உண்டு. யாழ்ப்பாணத்தில் தீவிர நிலையிலும் வன்னியில் மென்னிலையிலும் உள்ளது.)

வடக்கில் இவர்கள் இருவகையாக உள்ளனர்.

1. இந்தியாவிலிருந்து பல்வேறு நோக்கங் களுக்காக - தேவைகளுக்காக வடக்கிற்கு நேரடியாகக் கொண்டு வரப்பட்டவர்களும் வந்தவர்களும்.

2. இலங்கையின் தெற்கிலும் மேற்கிலும் நடத்தப் பட்ட இன வன்முறையினால் பாதுகாப்புத் தேடி வடக்கிற்கு வந்தவர்கள்.

முதலாவது தொகுதியினர் எண்ணிக்கையில் மிகச் சிறுபான்மையினராகும். சில ஆயிரம் வரையானோர். இவர்கள் பிரித்தானியர் காலத்திலும் அதற்கு முற்பட்ட சூழலிலும் பின்னரும் வடக்கிற்கு வந்து குடியேறியவர்கள். குறிப்பாக யாழ்ப்பாணம், மன்னார் மாவட்டங்களில். இதில் மன்னார்ப் பகுதியில் குடியேறியோர் பெரும்பாலும் கடற்றொழிலை ஆதாரமாகக் கொண்டவர்கள். யாழ்ப்பாணத்தில் குடியேறியோர் வணிகம், நகைத் தொழில், மருத்துவம், கலை, ஊடகத்துறைகளில் ஈடுபட்டனர்.

யாழ்ப்பாணத்தில் வண்ணைச் சிவன் கோவில், கன்னாதிட்டி, நாச்சிமார் கோவிலடி, பெருமாள் கோவிலடி, நல்லூர் செட்டித்தெரு போன்ற இடங்களில் இவர்கள் அதிகமாக இருந்தனர். அதாவது யாழ்ப்பாண நகர்ப்பகுதியில். தொழில், பொருளாதாரம் போன்றவற்றினால் வர்க்க நிலையில் மேலோங்கியிருந்ததால் இவர்களுக்கும் யாழ்ப்பாணச் சமூகத்தினருக்கும் இடையில் பெரிய இடைவெளிகள் ஏற்படவில்லை. இன்னும் இவர்கள் யாழ்ப்பாண நகரம், அளவெட்டி, சுதுமலை, வடமராட்சி போன்ற இடங்களில் உள்ளனர். காலப்போக்கில் இரு தரப்பினரும் கலந்துவிட்டனர்.

ஆனால், பின்னர் வடக்கிற்கு வந்து கூலித் தொழிலாளர்களாகக் குடியேறியோரும் குள நிர்மாணம், நெடுஞ்சாலை அமைத்தல் போன்றவற்றுக்காகப் பிரித்தானியரால் கொண்டு வரப்பட்டவர்களும் அப்படியல்ல. அவர்கள் தனியாக யாழ்ப்பாணம், வன்னிச் சமூகங்களுக்கு வெளியே நிறுத்தப்பட்டனர். இங்கு கூலிகளாகவும் இந்திய வம்சா வழியினாராகவுமே அடையாளம் காணப்பட்டனர். அதற்கான பிரத்தியேகச் சொற்களின் வழியாக

அடையாளமிட்டு அழைக்கப்பட்டனர்.

இரண்டாவது தொகுதியினர் எண்ணிக்கையில் பெரும்பான்மையினராகும். இவர்கள், தெற்கிலும் மேற்கிலும் 1958, 1977, 1981, 1983 ஆகிய ஆண்டுகளில் அரச ஆதரவுடன் சிங்களத் தரப்பினரால் நடாத்தப்பட்ட வன்முறையில் பாதிக்கப்பட்டவர்கள். ஏறக்குறைய இரண்டரை லட்சத்துக்கும் அதிகமானோர். அங்கே இனி இருக்க முடியாது என்ற நிலையில், பாதுகாப்புத் தேடி வடக்கிற்கு வந்தவர்கள். அப்படி வந்தவர்கள் வன்னிப் பகுதியில் தந்திரமாக நிறுத்தப்பட்டனர். யாழ்ப்பாணத்துக்குள் அனுமதிக்கப்படவில்லை. யாழ்ப்பாணச் சமூகத்துடன் கலந்துவிடக் கூடாது என்பதே இதற்கான காரணமாகும். யாழ்ப்பாணத்தில் நிலவும் சாதிய அமைப்பும் அதன் மனோ நிலையும் இந்த மக்களுக்கு எதிரானதாக இருந்தது. அங்குள்ள அடிநிலைச் சமூகத்தினரான ஒடுக்கப்பட்ட மக்கள்கூட இந்த மக்களை தமக்குக் குறைவானவர்களாக - கீழானோராகவே - பார்த்தனர். இடதுசாரிகளால் கூட இவர்களை யாழ்ப்பாணத்துக்குள் உள்வாங்க முடியவில்லை. இதனால் பிறிதொரு மக்கள் கூட்டமாக தனித்து விடப்பட்டனர். இப்பொழுது இதைச் சிலர் மறைக்கக் கூடும். ஆனால், மறுக்கவே முடியாத உண்மை இது. இவர்கள் அநேகமாக 'மலையக மக்கள்' என்று அழைக்கப்பட்டனர், அடையாளம் காணப்பட்டனர். இதில் ஒரு தொகுதியினர் மலையகப் பகுதிகளுக்கு அப்பால் கொழும்பு, காலி போன்ற இடங்களிலிருந்து வந்திருந்தோர். ஆனாலும் இவர்கள் எல்லோரும் 'மலையக மக்கள்' என்ற வகையிலேயே அடையாளம் காணப்பட்டனர்.

வன்னியில் நிறுத்தப்பட்ட இந்த மக்களுக்கு உரிய வகையில் குடியேற்ற நடவடிக்கைகள் எதுவும் மேற்கொள்ளப்படவில்லை. இதற்கான ஆணையை அரசோ அன்றைய தமிழ் அரசியல் தலைவர்களோ தமிழ் அரசியற் கட்சிகளோ நிர்வாகத்தினருக்கு வழங்கவும் இல்லை. அரச நிர்வாகப் பிரிவினரும் இந்த மக்களைக் குறித்து அக்கறையோடு செயற்படவில்லை. இவர்களுக்காகக் குரல் கொடுப்பதற்கு யாருமே இருக்கவில்லை. இதை அன்றைய பத்திரிகைகளைப் படித்தாலே புரிந்துகொள்ள முடியும். அன்று இந்த மக்களுடைய நிலையைக் குறித்து ஒரு பத்திரிகை கூட உரிய முக்கியத்துவம் அளித்து செய்தி வெளியிடவும் இல்லை. ஆசிரியர் தலையங்கள் எழுதவும் இல்லை. பேசாப்பொருளாகிய சமூகத்தினராகவிடப்பட்டனர். இதனால் இந்த மக்கள், அன்றைய வன்னிச் சூழலில் மிகமிகச் சிரமப்பட்டனர்.

அன்றைய வன்னிச் சூழல் என்பது பெருங்காடுகள் நிறைந்த பிரதேசமாகும். யானை, கரடி உள்ளிட்ட விலங்குகளும் பாம்பு, நுளம்புக் கடி என்ற பேரச்சச் சூழலையும் கொண்டது. இதனால் பெருந்தோட்டப் பகுதியிலும் தென்னிலங்கைச் சூழலிலும் பட்ட சிரமங்கள் போதாதென்று வடக்கிலும் இவர்கள் சிரமப்பட வேண்டியிருந்தது. மலையகப் பகுதியில் காலப்போக்கில் தொழிற்சங்கங்கள் உருவாகி, அந்த மக்களுக்குக் குரல் கொடுத்தன. மலையகத்துக்கெனத் தனியான அரசியற் சிந்தனை உருவாகியது. அரசியற் தலைமைகள் உருவாகி அங்கிருக்கும் மக்களுக்காக போராடின. கலை, இலக்கிய, பண்பாட்டுச் செயற்பாடுகளிலும் தனித்துவமான இயங்கங்கள் ஈடுபட்டன. இன்று 'மலையகம்' என்ற அடையாளத்தோடு அரசியல், இலக்கியம், சமூகவியல் துறைகள் துலங்குவதற்கு ஏதுவான சூழ்நிலை வளர்ச்சியடைந்திருந்தது. இவை எதுவும் வடக்கில் - வன்னிப் பகுதியில் குடியேற்றிய மக்களிடம் நிகழவில்லை. அதற்கு இடமளிக்கப்படவும் இல்லை. ஆகவே இவர்கள் அடையாளமற்ற - வரலாறற்ற மக்களாக மாற்றப்பட்டுள்ளனர். ஆனால், தமது வருவாயை அதிகரிப்பதற்கான கூலிகளாகவும் அரசியற் தேவைகளுக்கான தலைகளாகவும் இவர்கள் பயன்படுத்தப்பட்டனர். பதிலாக இந்த மக்களுடைய உரிமைகள் மதிக்கப்படவில்லை. வசதிகள் எதுவும் அளிக்கப்படவும் இல்லை.

இந்த மக்கள் வன்னியில் குடியேறிய காலப்பகுதியில் வன்னியில் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர்களுக்கும் வன்னியில் இருந்தோருக்கும் கட்டம் கட்டமாக அரச நிலம் பகிர்ந்தளிக்கப்பட்டது. அவர்களுக்கான அமைப்புகளும் செயற்பாட்டியக்கங்களும் உருவாகின. இந்த அரச நிலமானது குடியிருப்புக்குத் தனியாகவும் விவசாயச் செய்கைக்குத் தனியாகவும் வழங்கப்பட்டது. விவசாயச் செய்கைக்குரிய நிலத்துக்கு நீர் விநியோகம் (தண்ணீர்ப் பங்கு) இருந்தது. இதற்கென இரணைமடு, அக்கராயன்குளம், வன்னேரிக்குளம், விசுவமடுக்குளம், பிரமந்தனாறுக்குளம், முத்தையன்கட்டுக்குளம், வவுனிக்குளம், கட்டுக்கரைக்குளம் எனப் பல குளங்கள் மிகப் பெரிய அளவில் நிர்மாணிக்கப்பட்டன. அல்லது புனரமைப்புச் செய்யப்பட்டன. இந்தக் குளங்களை மையமாகக் கொண்டு உருவாக்கப்பட்ட குடியேற்றத் திட்டங்களுக்கு அடிப்படை வசதிகள் செய்து கொடுக்கப்பட்டது. பாடசாலைகள், சந்தைகள், வீதிகள், கமநலத் திணைக்கள அலுவலகம், மருத்துவமனை, விளையாட்டரங்கு, போக்குவரத்து எனத் தேவையான அனைத்து உட்கட்டுமாணங்களும் உருவாக்கப்பட்டது. கூடவே துறைசார் நிர்வாகக் கட்டமைப்பும் அதற்கான உத்தியோகத்தர்களும் நியமிக்கப்பட்டனர்.

ஆனால், மலையக மக்களுக்கு இவை எதுவுமே வழங்கப்படவில்லை. அவர்கள் தாமாகவே காடுகளை வெட்டிக் குடியிருப்புகளை உருவாக்க வேண்டியிருந்தது. இவற்றில் பெரும்பாலானவையும் அத்துமீறிய குடியிருப்புகளாகவே உருவாகின. அத்தனையும் நீர் வசதியில்லாத ஒதுக்குப்புறங்களிலேயே அமைந்தன. அதைத் தவிர வேறு வழியில்லை. அப்படி உருவாக்கப்பட்ட குடியிருப்புக் காணிகளைக் கூட வன்னியிலிருந்த

யாழ்ப்பாணத்தவர்களும் வன்னியின் பூர்வீகக் குடியினரும் குறைந்த விலைக்கு வாங்கி விட்டு மறுபடியும் இந்த மக்களைக் காடுகளை நோக்கித் துரத்தினர். சட்டபூர்வமற்ற குடியிருப்புகளுக்கு உட்கட்டமைப்பு வசதிகளைச் செய்ய முடியாது. ஆகவே அபிவிருத்தியைச் செய்வதற்கான வாய்ப்புகளில்லை என்று இந்த மக்களின் பிரதேசங்கள் புறக்கணிக்கப்பட்டன. மிக நீண்ட காலத்துக்குப் பின்னரே (அதுவும் யுத்தம் முடிந்த பின் உருவாகிய மீள்குடியேற்றத்துக்குப் பிறகே) சிறிய அளவில் அபிவிருத்தியும் வளப்பகிர்வுகளும் நடக்கத் தொடங்கியது.

அன்றைய வன்னிச் சூழல் காடுகள் நிறைந்தது. பொதுவாகவே போக்குவரத்து வசதிகள் குறைந்தது. இந்த நிலையில் இந்த மக்கள் காடுகளுக்குள்ளேயே தங்களுடைய குடியிருப்புகளை அமைக்க வேண்டியிருந்தது. குடிநீருக்கே அலைய வேண்டியிருந்தது. முல்லைத்தீவில் மன்னாகண்டல், றெட்பானா, கிளிநொச்சியில் தருமபுரம், கல்மடு, மாயவனூர், ஜெயபுரம், ஊற்றுப்புலம், காந்தி கிராமம், முறிப்பு போன்றவை இதற்குச் சிறந்த உதாரணங்களாகும்.

அன்று தென்பகுதியில் பாதிக்கப்பட்டு வந்த வடக்கின் பூர்வீக மக்களுக்கு உதவவும் ஆதரவளிக்கவும் ஆறுதல் தரவும் அவர்களுடைய உறவுகளும் ஊரவர்களும் இருந்தனர். இவர்களுக்கோ யாருமே இருக்கவில்லை. இந்தச் சூழலில் இடதுசாரிகள் மட்டும்தான் ஓரளவுக்கு தம்மால் முடிந்த உதவிகளைச் செய்தனர். இவர்கள் குடியேறிய விசுவமடு, நெடுங்கேணி, வவுனியா, செட்டிகுளம், கிளிநொச்சி, முத்தையன்கட்டு, மாங்குளம் போன்ற இடங்களில் இடதுசாரி இயக்கச் செயற்பாட்டாளர்கள் இணைந்து நின்று குடியிருப்புகளை அமைப்பதற்கும் இவர்களுடைய பிள்ளைகளின் கல்வி வளர்ச்சிக்கும் பங்களித்தனர். ஆனால், இது மிகச் சிறிய அளவில்தான் இருந்தது. இடதுசாரிகளின் சக்திக்கு ஏற்ற அளவில்.

1970களில் டேவிற் ஐயா, டொக்ரர் ராஜசுந்தரம், சண்முகலிங்கம் உள்ளிட்டோர் முன்னெடுத்த 'காந்திய' இயக்கம் இந்த மக்களுக்கு உதவுவதில் முன்னின்றது. அதனுடைய பணிகள் முக்கியமானவை. அதேவேளை அது இந்த மக்களை சிங்கள மக்கள் குடியேறக் கூடியதாகக் கருதப்பட்ட எல்லைப்புறக் கிராமங்களில் குடியேற்றியது என்பதையும் நாம் கவனத்திற் கொள்ளவேண்டும். எல்லைப்புறங்களில் இந்த மக்கள் குடியேற்றப்பட்டதால் சிங்களத் தரப்பின் அச்சுறுத்தல்களையும் தாக்குதல்களையும் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. கூடவே யானை, கரடி போன்ற காட்டு விலங்குகளின் தாக்குதலுக்கும் உள்ளாக வேண்டியிருந்தது. பாம்புக் கடி, நுளம்புத் தொல்லை வேறு பாடாய்ப்படுத்தியது. அத்துடன் எல்லைப்புறங்களில் அடிப்படை வசதியைப் பெறுவதே பெரும் சிரமாக இருந்தது. இந்த நிலையில்தான் இவர்கள் வாழ நிர்ப்பந்திக்கப்பட்டனர்.

'தமிழர் தாயகம்' என்ற நிலப்பாதுகாப்புக் கோட்பாட்டுக்கு அரண்களாக நிறுத்தப்பட்டதும் தொழிற்பட்டதும் இந்த மக்களே. அதனால் இவர்கள் சந்தித்த தொடர்பாதிப்புகள் பெரியது.

பின்னர் ஈரோஸ், புளொட், ஈ.பி.ஆர்.எல்.எவ் போன்ற ஆயுதப் போராட்ட இயக்கங்களும் பின்னாளில் விடுதலைப்புலிகளும் இந்த மக்களுக்கு ஓரளவுக்கு உதவின. ஆனால், எல்லோரும் விட்ட தவறு என்னவென்றால், இந்த மக்களுடைய அடிப்படை உரிமைகளைக் குறித்தும் அரசியல், சமூக பொருளாதாரப் பாதுகாப்பு, வளர்ச்சி பற்றியும் தீர்க்கமாகச் சிந்திக்கவில்லை. இதனால் இவர்கள் நவீன அடிமைகளாகவே வாழ நிர்ப்பந்திக்கப்பட்டனர். வன்னியில் விவசாயக் கூலிகளாக்கப்பட்டனர். அதை விட்டால் தேனீக்கடைத் தொழிலாளர்கள், கரை வலை இழுப்போர், விறகு வெட்டிகள், கிணறு தோண்டிகள், தினக்கூலிகள், சுமை தூக்கிகள் என்ற வகையிலேயே இவர்களுடைய வாழ்க்கையும் தொழிலும் இருந்தது. ஆண்களும் பெண்களும் இணைந்த கூலிகளாகவே பெரும்பாலானோர் இருந்தனர். இன்னொரு தொகுதியினர் யாழ்ப்பாணத்தவர்களுடைய வன்னிக் காணிகளின் பராமரிப்பாளர்களாகவும் அந்தக் காணிகளில் கூலிகளாகவும் இருந்தனர். இந்தக் குடும்பங்கள் முழுமையாகவே முதலாளிகளுக்கு வேலை செய்ய வேண்டியிருந்தது. இந்தச் சிறுவர்களை தொழிலுக்கு அமர்த்துவதைப் பற்றி யாரும் குற்றவுணர்வே கொள்ளவில்லை. வன்னியில் மட்டுமல்ல, யாழ்ப்பாணத்திற்கும் தொழிலாளர்களாகச் சிறார்களை அழைத்துச் சென்றனர்.

இவ்வாறான நிலையில் இவர்களால் சமூகமாகத் திரளக் கூடிய சாத்தியங்கள் இல்லாமற் போனது. ஒரு சமூகமாகத் திரள்வதற்கான பிரக்ஞை உருவாகுவதற்கு அடிப்படையானது நிரந்தரத்தன்மையும் பொருளாதார நிலையுமாகும். அது இல்லையென்றால் அந்தப் பிரக்ஞை எழாது. எழுந்தாலும் அது சமூகப் பிரக்ஞையாக உருவாகாது. பொருளாதார நிலையில் ஏற்படும் மத்தியதர வர்க்கத்தின் அறிவுசார் வளர்ச்சியே தமது அடையாளத்தைக் குறித்தும் தமது இருப்பைக் குறித்தும் சிந்திக்கத் தூண்டும். வன்னியில் இந்த மக்களிடம் அதற்கான சாத்தியங்கள் அப்பொழுது இருக்கவில்லை. இதனால் சமூகமாகத் திரள்வதற்கான அடிப்படைகள் நீண்டகாலமாக உருவாகவில்லை. ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளாக அப்படியானதொரு சிந்தனையோ எண்ணமோ உருவாகவில்லை.

இதனால் இவர்கள் பெருவாரியாக வாழ்ந்தாலும் உதிரிகளைப்போலவே இருந்தனர். உதிரிகளை அல்லது உதிரி நிலையை எவரும் இலகுவாகக் கையாள முடியும். எத்தகைய பாதிப்புகளோ அநீதியோ இழப்புகளோ

நேர்ந்தாலும் அதை எதிர்க்கவும் அதற்காகக் குரல் கொடுக்கவும் உதிரித்தன்மை இடமளிக்காது. இந்தத் தன்மை இவர்களை மிகப் பாதிப்புக்குள்ளாக்கியது. நீண்டகாலத்துக்குப் பலவீனமாகவே வைத்திருந்தது. பொருளாதாரச் சுரண்டல் தொடக்கம் பாலியற் சுரண்டல் வரையில் இந்தப் பாதிப்பு நீண்டது. இது இவ்வாறான நிலைமையில் உள்ள அத்தனை சமூகத்தினருக்கும் நேரும் பொது விதியாகும்.

சமூகமாகத் திரளக் கூடிய நிலையோ அதற்கான கூட்டுணர்வோ இருந்தால்தான் எதையும் எதிர்கொள்ளக் கூடிய பலம் கிடைக்கும். மட்டுமல்ல அந்தக் கூட்டுணர்வு தமது அடையாளத்தைக் குறித்துச் சிந்திக்கவும் வைக்கும். இதை அடிநிலையில் உள்ள மக்கள் எட்டுவது எளிதானதல்ல. இரண்டாவது, இவர்களை ஒருங்கிணைக்கக் கூடிய அரசியற் சக்திகள் அல்லது தொழிற்சங்கங்கள் வேண்டும். குறைந்த பட்சம் கலை, இலக்கிய, அரசியல் உணர்வுள்ளவர்களாவது எழ வேண்டும். இது இவர்களுக்குக் கிட்டவில்லை.

ஆக இந்த இரண்டு அடிப்படை வலுக்களும் இல்லாத நிலையில் உதிரி மக்களாகவே இவர்கள் வாழ வேண்டியதாயிற்று. ஆனால், இவர்களை ஒரு சமூகமாகவே (பின்தங்கிய, பிறத்தியார் சமூகம் என) அடையாளம் கண்டு பிற (யாழ்ப்பாண, வன்னிச்) சமூகத்தினர் நடத்தினர். இது ஒரு சுவாரசியமான - ஆனால், துயரமான முரணாகும்.

தம்மிலிருந்து வேறுபடுத்திக் கொள்வதற்கு இவர்களை ஒரு தனிச் சமூகத்தினராக நோக்கியவர்கள், மறுபக்கத்தில் இவர்களை ஒரு சமூகத்தினர் என்ற வகையில் அவர்களுக்குரிய அடிப்படைத் தகுதிகளான அரசியல் பெறுமானத்தையும் சமூகப் பண்பாட்டு வலுக்களையும் பொருளாதார அடிப்படைகளையும் வளப்பகிர்வையும் அங்கீகரிக்கத் தயாராக இருக்கவில்லை. இவர்களைத் தமக்குப் பயன்படுத்துவதற்கும் தமக்குக் கீழே வைத்துக்கொள்வதற்கும் விரும்பினார்களே தவிர, சக மனிதர்களாக அங்கீகரிக்கத் தயாராக இருக்கவில்லை. இதனால்தான் சுமார் ஐம்பது ஆண்டுகாலமாக - இரண்டு மூன்று தலைமுறைகளாக - இவர்கள் எந்த அடையாளத்தையும் பெற்றுக்கொள்ள முடியாதவர்களாக இருக்க வேண்டியிருந்தது.

கூலிகளாகப் பயன்படுத்தப்பட்டு வந்த இந்த மக்களை கிறிஸ்தவ அமைப்புகளும் இயக்கங்களுமே மெல்ல மெல்ல அடுத்த கட்ட நிலைக்கு உயர்த்தின எனலாம். ஆனால், இதில் கிறிஸ்தவ அமைப்புகள் இந்த மக்களை மதம் மாற்றிய சம்பங்களும் நிறைய நடந்துள்ளது. வன்னியில் உள்ள கிறிஸ்தவக் குடியிருப்புகளை நோக்கினால் இந்த உண்மை புரியும். குறிப்பாக புதிய கிறிஸ்தவக் கிராமங்கள் இந்த வகையானவை. ஆரோக்கியபுரம், சமாதானபுரம், அமெதி நகர், சாந்திபுரம் என்ற பெயர்களே இதற்கு அடையாளம். ஆனாலும் இதைத் தவிர்க்கவும் முடியாத நிலை இருந்தது என்பதை நாம் ஏற்றுக்கொள்ளவே வேண்டும். இது ஒரு அடையாள அழிப்புத்தான். இது ஒரு வன்முறையே. பலவீனமான நிலையில் மேற்கொள்ளப்பட்ட ஒரு தந்திரோபாயச் செயல் இது என இன்று யாரும் இதைப்பற்றிக் கூற முற்படலாம். ஆனால், அதற்கு இடமளித்தது யார்? இந்த மக்களுக்கு ஒரு சிறிய வீட்டையும் (உண்மையிலேயே இந்த வீடுகள் மிகச் சிறியவையே) ஒரு சிறு துண்டு நிலத்தையும் (இந்த நிலமும் மிகமிகச் சிறியதே. ஆகக் கூடியது கால் ஏக்கர் நிலம் மட்டுமே) இந்த அமைப்புகள் வழங்கின. இதில் கூடுதலான ஆர்வம் காட்டியவை தென்னிந்திய திருச்சபை தொடக்கம் றோமன் கத்தோலிக்கம் அல்லாத பிற கிறிஸ்தவப் பிரிவுகளேயாகும்.

இவை இந்த மக்களின் கல்வியில் கூடுதலான அக்கறையைக் காட்டின. இன்று இந்தச் சபைகளின் போதகர்களாக இந்தப் பிரதேசங்களில் இருப்பவர்களில் அநேகர் இந்த மக்களில் இருந்து உருவாகியவர்களே. அதைப்போல ஏனையவர்கள் படித்து பிற துறைகளில் மிளிரத் தொடங்கினர். இது 1990க்குப் பின்னரே ஓரளவுக்கு நிகழத் தொடங்கியது.

1958இல் வன்னியை நோக்கி வந்த இந்த மக்களிலிருந்து 1990களில்தான் அங்குமிங்குமாக அடையாளம் தெரியக் கூடிய ஆளுமைகள் மேற்கிளம்பத் தொடங்கினர். இவர்கள் வளர்ச்சியடைய மேலும் ஒரு பத்துப் பதினைந்து ஆண்டுகள் தேவைப்பட்டது. அதற்குள் இவர்கள் பட்ட சிரமங்களும் சந்தித்த அவமானங்களும் சாதாரணமானதல்ல. இன்றும் அரச உத்தியோகத்தில், வர்த்தகர் சங்கம், கோயில் நிர்வாகம் போன்ற பொதுவெளியில் இவர்களுக்குப் பெரும் சவால் உண்டு. இதைக் கடக்க முடியாமலே உள்ளனர். இதுதான் பேரவலம்.

ஏறக்குறைய அரை நூற்றாண்டு காலத் துயரத்துக்குப் பிறகு கடுமையான சிரமத்தின் மத்தியில் படித்து முன்னேறினாலும் பிற தொழில்களாலும் உழைப்பினாலும் வளர்ச்சியடைந்தாலும் அதை அங்கீகரிப்பதற்கு தமிழ்ச் சமூகத்தின் மனதில் இடமில்லை. தமிழ்ப் பாராளுமன்ற உறுப்பினரே பகிரங்கமாக ‘வடக்கத்தையான்’ என்று சொல்லும் நிலைதான் உள்ளது. இன்னும் இந்த நீதி மறுப்புத் தொடர்கிறது. நீதியைக் குப்பையிலே போட்டு விட்டு வேறு எதையோவெல்லாம் எடுத்து வைத்திருக்கிறோம். நீதியைக் குப்பையில் போட்டு விட்டால் மிஞ்சுவது என்ன? அதற்குப் பிறகு எப்படிச் சமத்துவத்தை எதிர்பார்க்க முடியும்? சமூக நீதியையும் ஜனநாயகத்தையும் எவ்வாறு எதிர்பார்ப்பது?

இந்தச் சந்தர்ப்பத்திலும் தவிர்க்க முடியாமல் நாம் இயக்கங்களையே இங்கும் குறிப்பிட வேண்டியிருக்கிறது. இந்த மக்களை அனைத்துச் சுரண்டல்களில் இருந்தும் மீட்டது இயக்கங்கள்தான்.

அது முற்று முழுதான மீட்பு நடவடிக்கை என்று சொல்லமுடியாது விட்டாலும் சிறுவர் தொழிலாளர்களாகப் பயன்படுத்துவதையும் பாலியல் ரீதியான சுரண்டல்களையும் இயக்கங்களின் காலத்தில் யாழ்ப்பாணச் சமூகத்தினரால் மேற்கொள்ள முடியவில்லை. இவை இரண்டுக்கும் முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

இந்தக் காலப்பகுதியில் பெரும்பாலானோருக்கு சிறிய அளவிலாயினும் நிரந்தரக் குடியிருப்புக்கான நிலம் கிடைத்தது. பின்பு விரைவான சமூக முன்னேற்றம் ஏற்பட்டது. விரைவான சமூக முன்னேற்றம் ஏற்படத் தொடங்கும்போது தாம் ஒரு தனிச் சமூகத்தினர் என்ற உணர்வுந்தலுக்கு உள்ளாகினர். ஆனால், இந்த வளர்ச்சியில் ஏற்படக் கூடிய சிக்கல்களும் உருவாகின. பலவகையான சிந்தனைப் போக்குகளும் நிலைப்பாடுகளும் உருவாகின. தாம் ஒரு சமூகத்தினர் என்றாலும் அதற்குள் எழுந்த அரசியல் உணர்வுகளும் சமூக நிலைப்பாடுகளும் பலவாகின. மத்தியதர வர்க்கத்தை நோக்கி வளர்ச்சியடையும் எந்தச் சமூகத்திலும் நிகழும் தளம்பலும் தடுமாற்றமும் ஏற்படுவது வழமை. அது இந்த மக்களிடமிருந்து வளர்ச்சியடைந்தோரிடத்திலும் காணப்படுகிறது. தம்மைத் தனித்து அடையாளம் காண்பதற்கும் அதை முன்னிறுத்துவதற்கும் பதிலாக வடக்கில் உள்ள பெருந்திரள் (தமிழ்த் தேசிய) அரசியலுக்குள்ளும் அந்தச் சிந்தனைப் போக்கிற்குள்ளும் இவர்கள் சங்கமிக்கத்தொடங்கியுள்ளனர். சரியாகச் சொன்னால் கரையத் தொடங்கினர். ஆனால், எப்படித்தான் சங்கமித்தாலும் கரைந்தாலும் இவர்களைச் சுற்றி ஒரு வட்டத்தைப் போட்டு வெளியே நிறுத்தி வைத்துக் கொண்டிருக்கிறது வடக்குச் சமூகம்.

ஆனாலும், முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் வடபுலத்தினரால் கையாளப்பட்டதைப்போல, வடக்கு நோக்கி வந்த அல்லது வடக்கிலிருக்கும் மலையகத் தமிழர்களையோ இந்திய வம்சாவழி மக்களையோ இன்று முழுமையாகக் கையாள முடியாது. அதாவது வெறும் கூலிகளாக நடத்த முடியாது என்ற நிலை உருவாகியுள்ளது. சிறார்களை வேலைக்கு அமர்த்தவும் முடியாது.

இதற்குக் காரணம், முன்னரே நாம் குறிப்பிட்டுள்ளதைப்போல படிப்படியாக தங்களுக்கான நிலத்தைப் பெற்றுக்கொண்டதும் இடதுசாரிகளின் மென்னாதரவு உட்பட இயக்கங்களின் ஆதரவு கிடைத்ததுமாகும். இன்னொன்று, தனித்தனியாக மேற்கொள்ளப்பட்ட பலத்த போராட்டங்கள், கடினமான முயற்சிகளின் வாயிலாக மெல்ல மெல்ல இவர்களுடைய அடுத்த தலைமுறையினர் கல்வியைப் பெற்றதும் சுயதொழில் முயற்சிகளில் ஈடுபட்டதுமாகும். ஏறக்குறைய கீழ் மத்தியதர வர்க்கம் ஒன்று இவர்களிடையே வளரத் தொடங்கியுள்ளது.

இது சிந்திக்கவும் சுயமாக நிற்கவும் கூடியதொரு சமூக வளர்ச்சியைக் கொடுத்தது. ஆனாலும் ஒட்டு மொத்த சமூகத்தினரும் இந்த வளர்ச்சிக்குட்பட்டனர் என்றில்லை. இருந்தாலும் இந்தச் சமூகத்திற்குள் இத்தகைய ஒரு வளர்ச்சி நிலை சிறிய அளவிலேனும் உருவாகியது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த வளர்ச்சியை உளப்பூர்வமாக ஏற்றுக்கொள்வதில் வடக்கு வாழ் சமூகத்தினருக்கு உளச் சிக்கலாகவே இருக்கிறது. இதனால் தங்களால் முடிந்த அளவுக்கு இந்தச் சமூகத்தினரைத் தொடர்ந்தும் ஒடுக்குவதற்கு முற்படுகின்றனர். வெளியே தெரியாமல் இந்த ஒடுக்குதல் நிகழ்கிறது. இது எப்படியென்றால் -

1. நகர எல்லைக்கு அப்பால் இந்த மக்களுடைய குடியிருப்புகளைத் தள்ள முயற்சிப்பது. (இந்த மக்களின் குடியிருப்புகளைப் பட்டியலிட்டு, அவற்றின் அமைவிடம் எங்கே உள்ளது, அவை எத்தகைய நிலையில் உள்ளன என்பதை அவதானித்தால் இந்த உண்மை தெளிவாகப் புரியும்).

2. கோயில்கள், பொது நிறுவனங்கள், அமைப்புகள் போன்றவற்றில் இவர்களுக்கான உரிமையையும் இவர்களுடைய பிரதிநிதித்துவத்தையும் இல்லாமற் செய்யும் முயற்சிகள். (வன்னியில் உள்ள கோயில்களின் விவரங்களைத் திரட்டி, அவற்றில் யார் யாரெல்லாம் தலைமைப் பொறுப்பில் உள்ளனர். இந்த மக்களுக்கு இவற்றில் வழங்கப்பட்டுள்ள இடம் என்ன? அது எவ்வளவு என்று பார்க்கலாம். அதைப் போல வன்னி மாவட்டங்களில் உள்ள அரசுசார் பொது அமைப்புகள், அரசு சாராத அமைப்புகள் போன்றவற்றில் இவர்களுக்கான இடம் எந்தளவில் உண்டு? அதற்கு மேல் செல்ல முடியாததற்கான காரணம் என்ன என இரண்டு பக்கத்தினரையும் கேட்டு அறிந்துகொள்ளலாம்).

3. நீர்ப் பயன்பாட்டிலிருந்து - பாசன நீர்ப் பாவனையிலிருந்து அகற்றினர். குளமும் நிலமும் தமக்கே தவிர, வந்தேறிகளுக்கில்லை என்ற மனப்பாங்கின் வெளிப்பாடே இது. இதை எதிர்த்துக் குரல் எழுப்பவோ இதைக் குறித்துக் கேள்வி கேட்கவோ முடியாத நிலையே இன்றளவும் உள்ளது. அப்படிக் கேள்வி எழுப்பப்பட்டாலும் அதற்கு உரிய பதில் எதுவும் எவரிடமிருந்தும் கிடைக்கப் போவதில்லை.

4. கல்வி மூலமாகப் பெற்ற உத்தியோகம், பதவி நிலைகளில் பாரபட்சமாக நடத்தப்படுகின்றனர். முடிந்தளவுக்கு ஓரம்கட்டப்படுகின்றனர். தவிர்க்க முடியாமல் இவர்களை சட்டரீதியாக ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தாலும் சமூக அடிப்படையிலான மனப்பாங்கில் புறக்கணிப்பு - பாரபட்சம் செய்யப்படுகின்றனர். முடிந்தளவுக்கு இவர்களை பின்தங்கிய பிரதேசங்களை நோக்கித் தள்ளும் செயற்பாடுகளே நிலவுகிறது. அல்லது தனிமைப்படுத்தி நெருக்கடிக்கு உள்ளாக்கப்படுகின்றனர். அண்மைக்

காலத்திற்கூட இந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அங்கங்கே தொடர்ச்சியாக அவமதிப்புக்கும் புறக்கணிப்புக்கும் உள்ளாக்கப்பட்டதை பார்க்கலாம்.

5. வணிக ரீதியாக வளர்ச்சி பெறுவதற்கான வாய்ப்புகளைத் தடுத்தனர். வர்த்தகர் சங்கங்களில் இதனை நன்றாக அவதானிக்கலாம். வன்னி மாவட்டங்களிலும் சரி, யாழ்ப்பாணத்தில் உள்ள பல வர்த்தக சங்கங்களிலும் இந்த மக்களின் பிரதிநிதிகள் என்பது விரல் விட்டு எண்ணி விடக்கூடிய அளவில் அருந்தலாகவே உள்ளனர். அதுவும் மிகப் பிந்திய அண்மைக் காலத்தில்தான் கிளிநொச்சி, வவுனியா போன்ற இடங்களில் சிறிய அளவிலான பிரதிநிதித்துவம் கிடைத்திருக்கிறது. அதிலும் இவர்கள் எத்தகைய தீர்மானத்தையும் மேற்கொள்ள முடியாதவர்களாகவே உள்ளனர். இதனால் எதையும் அனுசரித்துப் போகவேண்டிய நிலையே தொடர்கிறது.

6. அரசியலில் உரிய பிரதிநிதித்துவம் மறுதலிக்கப்பட்டுள்ளது. அல்லது தந்திரோபாய ரீதியாக தமது அரசியல் வேட்கைக்கு இந்த மக்கள் பலியிடப்பட்டனர்; பாவிக்கப்பட்டனர். முன்னர் தமிழரசுக் கட்சி, தமிழர் விடுதலைக் கூட்டணி போன்றவையே இவர்களுடைய தலைவிதியையும் தீர்மானித்தன. பின்பு இயக்கங்களின் காலத்தில் இயக்கங்களுடன் இணைந்து நின்றனர். அதில் பணியாற்றினர். அவ்வளவுதான். அதிலும் சமையற்காரர்களாகவும் காவலர்களாகவும் கிணறு தோண்டிகளாகவும் விறகு கொத்திகளாகவுமே பெரும்பாலானோரும் இருந்தனர். இளைய தலைமுறையினர் இயக்கத்தில் சேர்க்கப்பட்டுப் போராளிகளாகினர். அதுவே 2009 வரையான இவர்களுடைய அரசியல் பிரதிநிதித்துவமும் பங்கேற்புமாக இருந்தது. 2009க்குப் பின்னர் இவர்களில் ஒரு சாராரை தமிழ்த் தேசிய சக்திகள் பயன்படுத்திக்கொண்டன. அதாவது வாக்குகளைப் போடும் இயந்திரங்களாக மட்டும். விதிவிலக்காக வவுனியாவைச் சேர்ந்த ஒரேயொருவருக்கு மட்டுமே மாகாண சபையில் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. அதுவும் வரையறுக்கப்பட்ட அளவில். மற்றும்படி பாராளுமன்ற தேர்தல்களில் வேட்பாளர்களாகக் கூட இந்த மக்களிடமிருந்து ஒரு பிரதிநிதி கூட நிறுத்தப்பட்டதில்லை. உள்ளூராட்சி சபைகளில் அங்கொன்று இங்கொன்றாக சிலர் நிறுத்தப்பட்டனர். அது அந்த மக்கள் வாழிடப் பிரதிநிதித்துவத்தை மறுக்க முடியாது என்ற காரணத்தினால்.

இதேவேளை தமிழ் மக்களின் அரசியல் உரிமைக் கோரிக்கைக்கு எதிராகத் தாம் இருந்து விடக் கூடாது என்ற அடிப்படையில் இந்த அரசியல் புறக்கணிப்பை வேதனையோடு பொறுத்திருக்கின்றனரே தவிர, உள்ளே அனலாகக் கொதித்துக்கொண்டேயுள்ளனர். இதனால்தான் அண்மைய காலத்தில் தமக்கென தனி அடையாளத்தைக் கோருகின்ற குரல்கள் இந்த மக்களிடமிருந்து எழுந்து வருகின்றன. ஆயினும் இந்த விசயத்தில் தாம் அவசரப்பட்டு எதிர்நிலைப்பாடு எடுத்து விடக்கூடாது. அது தமிழ் மக்களுக்கும் அதில் ஒரு அங்கமாக இருக்கும் தங்களுக்கும் பாதிப்பை ஏற்படுத்தும் என ஒவ்வொருவரும் பொறுப்பாகச் சிந்திக்கின்றனர். இதில் இந்த மக்களிடத்தில் உள்ள நிதானத்தை பாராட்டவே வேண்டும். இப்படி நாம் யாருக்காகவும் பொறுத்திருக்க வேண்டியதில்லை. எமக்கு இழைக்கப்படுகின்ற அநீதிக்கு எதிராக எழ வேண்டும் என்ற எதிர் நிலைப்பாட்டை எடுத்திருப்போரையும் நாம் அறிவோம். அதாவது தமக்கான வேர்களைத் தேடுவோராகவும் அடையாளங்களை நிறுவ முற்படுவோராகவும் அவர்களை அவதானிக்க முடிகிறது.

7. இந்த மக்கள் வாழும் பிரதேசங்கள் தொடர்ந்தும் அபிவிருத்தியில் புறக்கணிப்புக்குள்ளாக்கப்பட்டன. வீதி, பாடசாலை, மின்சாரம், நீர் உட்பட அனைத்து அபிவிருத்தியிலும் இந்த மக்களின் பிரதேசங்கள் பாராமுகமாகவே நடத்தப்பட்டன. இன்னும் இந்த நிலை ரகசியமாகவும் பரகசியமாகவும் தொடர்கிறது.

8. பிரதேச வரலாற்றுப் பதிவுகளிலும் சமூக அடையாளத்தை நிலைநிறுத்தும் பண்பாட்டு நடவடிக்கைகளிலும் இவர்களுக்கான இடம் மறுதலிக்கப்படுவது தொடர்கிறது.

இப்படி எந்த வகையிலெல்லாம் நிராகரிப்பையும் ஒடுக்குமுறையையும் மேற்கொள்ள முடியுமோ அதையெல்லாம் மேலாதிக்கவாதிகள் செய்து வருகின்றனர். இதனால் எழுச்சி பெற்று வந்த இந்த மக்களின் இளைய தலைமுறையினர் மிகப் பெரிய இடைஞ்சல்களையும் அவமானப்படுத்தல்களையும் சந்திக்க வேண்டியதாயிற்று. இது மிகப் பெரிய புற நெருக்கடி மட்டுமல்ல அக நெருக்கடியையும் கொடுக்கிறது. இந்திய வம்சாவழியினராகவும் இல்லாமல் மலையக மக்களாகவும் இல்லாமல் இலங்கைத் தமிழராகவும் இல்லாமல் உதிரி மக்களாக இருக்கிறார்கள். ஆக இந்த மக்களுக்கென வரலாறே இல்லை. அப்படியிருந்தாலும் இவர்கள் மலையகத்தை விட்டு விட்டு வருவதற்கு முன்பான வரலாறு உண்டே தவிர, அதற்குப் பிறகான வரலாறு கிடையாது. வரலாற்றை அழிப்பதே ஒடுக்குமுறையின் பிரதான உத்தியாகும். அது இங்கே நுட்பமாகப் பின்பற்றப்படுகிறது.

முகமிழந்த மனிதர்களாக வடக்கு நோக்கி வந்த மலையக மக்கள் ஆக்கப்பட்டுள்ளனர். இனி வரும் தலைமுறைகள் தமது வரலாற்றுத் தொடர்ச்சியை அறிய முடியாமலும் வெளிப்படுத்த முடியாமலும் உள்ள நிலைமையே உருவாகியுள்ளது. தங்கள் உறவுகள் மலையகத்திலும் இந்தியாவிலும் உள்ளனர் என்பதை இன்றைய முதியவர்களே நினைவு கொள்கின்றனர். இரண்டாம் மூன்றாம் தலைமுறையினர் இதை அறிந்திருந்தாலும் தெரிந்திருக்கவில்லை. அதாவது

தகவலாக அறிந்திருக்கிறார்களே தவிர, முகம் தெரிந்தவர்களாக - விவரம் தெரிந்தவர்களாக இல்லை. இனி வரவர இதற்கான சாத்தியங்கள் குறைவடைந்தே செல்லும். ஆக தங்களை வெளிப்படுத்திக்கொள்ள முடியாத நிலையில் இவர்கள் உள்ளனர்.



ஈழத்தமிழர்கள் தம்முடைய வரலாற்றையும் அதனுடைய பெருமிதங்களையும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். அதை மீளுருவாக்கம் செய்ய முயற்சிக்கிறார்கள். மரபுரிமைகளைப் பற்றிப் பேசுகிறார்கள், சிந்திக்கிறார்கள். ஆனால், இந்த மக்களுடைய வரலாறு, மரபு, பண்பாடு பற்றிய கவனமும் கரிசனையும் என்ன? அதை அவர்கள் பேணுவதற்கும் வெளிப்படுத்துவதற்கும் இடமளிக்கப்படுகிறதா? பேசாமல் கரைந்து விடுங்கள் என்றுதானே சிந்திக்கப்படுகிறது. அப்படி ஒரு சமூகத்தினரின் - மக்கள் திரளின் - சுயத்தை அழிக்கக் கோருவதும் நிர்ப்பந்திப்பதும் எந்த வகையில் நியாயமானது? யாழ்ப்பாணத்தையும் வன்னியையும் கிழக்கையும் பூர்வீகமாகக் கொண்டவர்களுக்குத்தான் வரலாறும் மரபுரிமையும் பண்பாடும் வேண்டுமா, இந்த மக்களுக்கு அதெல்லாம் தேவையில்லையா? இது எந்த வகையில் நீதியானது?

அரசியல் விளக்கத்தின்படி இந்த மக்கள் சொல்கிறார்கள்,'இனிமேல் நாங்கள் எந்த நிலையிலும் வடக்கைச் சேர்ந்தவர்களே. இலங்கைத் தமிழர்களே' என. இந்த எண்ணத்தோடுதான் இவர்கள் வடக்கில் உள்ள அரசியற் தலைமைகளுடன் இணைந்து வேலை செய்கிறார்கள். அவர்களுக்கு வாக்களிக்கிறார்கள். தங்களுக்குரிய இடமோ அங்கீகாரமோ இல்லை என்றாலும் அந்த அரசியலையே ஏற்றுக்கொள்கிறார்கள். இதனால் இவர்கள் வடக்குக் கிழக்குத் தமிழர்களோடு இணைந்து பிரிவினையை (தமிழீழத்தை - சமஸ்டியை) கோருகிறார்கள்.

ஆனால், மலையகத்தில் உள்ள மக்களோ தம்மைப் புறக்கணிக்காமல் இலங்கையர்களாகச் சேர்த்துக்கொள்ளுங்கள் என்கின்றனர். ஆக அங்கே இலங்கைத் தேசியத்துக்கான அடையாளம் கோரப்படுகிறது. இங்கே தமிழீழத்தை நோக்கிய - சமஸ்டியை அடிப்படையாகக் கொண்ட பிரிவினை முன்வைக்கப்படுகிறது. ஒரே சமூகத்தைச் சேர்ந்த மக்கள் வாழிடத்தினால் வெவ்வேறு அரசியல் நிலைப்பாட்டை எடுக்க வேண்டிய வரலாற்று நிர்ப்பந்தம் உருவாகியுள்ளது. ஆனால், துயரான நிலை என்னவென்றால் இரண்டு இடத்திலும் இவர்கள் ஒடுக்கப்படுகிறார்கள் - புறக்கணிக்கப்படுகிறார்கள் என்பதே.

இப்படி வரலாற்றிலும் வாழ்விலும் மிக இக்கட்டான நிலைமைக்குள் சிக்குண்ட இந்த மக்களுடைய எதிர்காலம் பற்றி இன்னும் நிர்ணயமான எந்த வழிமுறைகளும் யாராலும் முன்வைக்கப்படவில்லை. இந்த மக்களை எப்படியாவது கரைத்துத் தமது அதிகாரத்தின் கீழும் ஆளுகையின் கீழும் கொண்டுவந்து விட வேண்டும் என்பதிலேயே வடக்குச் சமூகமும் அதன் அரசியற் தலைமையும் உள்ளன. இதற்குத் தந்திரமான பொறிகளையும் பொறிமுறைகளையும் அது வலு கலாதியாகக் கையாள்கிறது.

பதிலாக இவர்களுக்கான நீதியை வழங்குவதற்கு அது தயாரில்லை. அதைக் கேட்டோ போராடியோ பெறும் நிலையில் வடக்கு நோக்கி வந்த மலையக / இந்திய மக்களும் இல்லை. அங்குமிங்குமாக கிராம மட்டத்திலான தலைவர்கள் இருக்கின்றனரே தவிர, பிராந்திய மட்டத்திலான ஆளுமைகளும் தலைமைகளும் இந்த மக்களிடத்தில் உருவாகவில்லை.

இதை எப்படித் தீர்த்துக் கொள்வது?

சமத்துவம், சமூக நீதி, ஜனநாயகம் என்ற கருதுகோளுடனும் அரசியல் நிலைப்பாட்டுடனும் இல்லாத எவராலும் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வைக் காண முடியாது. இதை இந்த மக்களும் புரிந்துகொள்ள வேண்டும். அத்தகைய நிலைப்பாட்டுடன் இயங்கும் சக்திகளை இனங்காண வேண்டும். அவ்வாறான சக்திகளோடு இணைந்து வேலை செய்ய வேண்டும். அதாவது தமது மீட்புக்கான ஏணிப்படிகளை இந்த மக்களே காண வேண்டும். வானத்திலிருந்து எந்த அற்புதங்களும் நிகழாது. மண்ணிலேயே அதை விளைக்க வேண்டும். அதற்குக் கடுமையாக - நிதானத்துடன் அறிவாகச் செயற்பட வேண்டும். அதையே வரலாறு எதிர்பார்த்து நிற்கிறது. ஆம், புதியதொரு வரலாற்றின் பிறப்புக்காக.

நீ யார்?
நான் யார்?
நாம் யார்?
ஒடுக்குமுறையின் முன்னே நாம் ஒன்று
விடுதலையில் நாம் வேறு வேறா?

கருணாகரன் <poompoom2007@gmail.com>

5

கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ்க் கவிதையில் பெண் கவிஞர்களின் பாடுபொருளும் பங்களிப்பும் குறித்த ஓர் அலசல்..

# பெண் மற்றும் குடும்பவெளி

**க்ருஷாங்கினி**

நம் குடும்ப வெளி உறவுகளில் ஏற்படும் சிக்கல் குறித்து ஆராய்ந்தால், அது பெண்களின் கவிதைகளில் வெளிப்படும் கருப்பொருள் குறித்து பார்வையைச் செலுத்த உதவும்.

உறவுச்சிக்கல்,மனச்சிக்கல்,பெண் அடிமைத்தனம், ஆணாதிக்கம், குடும்பத்திற்கான மாற்று என பல பிரிவுகளில் அமைகிறது உறவுச் சிக்கல்கள். இரு தனி மனிதர்கள் இணையும் போது உறவுகளால் இருவரின் தனிப்பட்ட இடம் குறுகுவதுடன் ஒருவருடையது மற்றொருவருடையதில் ஊடுருவும் நிலை உண்டாகிறது. அதில் இருவரின் இடமும் ஓரளவு இழக்கப்படுகிறது. நெருக்கமான பிடித்தமான உறவாயிருப்பின் இட இழப்பு என்பது சந்தோஷத்துடன் குறுக்கிக்கொள்வதாகிறது. இருவரின் இணைப்பில் தனி இடம் மறைந்து இருவருடையதும் இணைந்து ஓரிடம் ஆகிறது.

இந்நிலையில், மூன்றாமவரின் ஊடுருவல் இருவரிடமும் இடைவெளியையும் மாற்றத்தையும் ஏற்படுத்துகிறது. கலக்கம் அடைகிறது. இது ஆண்-பெண் இடையிலான உறவில் பாலியல் பொறாமையை உண்டாக்குகிறது. இரு ஆண், ஒரு பெண் என்னும்பொழுது கொலையில் முடிவடைகிறது. மணமுறிவுக்கு வழி வகுக்கிறது. இரு பெண், ஒரு ஆண் என்னும் நிலையில் இது பெண்ணின் (மனைவியின்) பாலியல் பொறாமையைத் தூண்டி விடுகிறது. மற்ற பெண்ணை விரட்டி விடவும், அவளைத் தன் கணவனிடமிருந்து தனிமைப்படுத்தவும் தான் முதலில் முயல்கிறாள். மௌனம் காத்து காத்து இயலாமல் போகும் போது சுய பச்சாதாபம் மேலிட தற்கொலைக்கு ஆளாகிறாள்.

குடும்பத்துக்குள் மற்றொரு பெண் உள் நுழைந்தால் மனைவியானவள் கணவனை தன் பிடிக்குள் இன்னமும் இறுக்கிக்கொள்கிறாள். அதிகம் பாலுறவுக்கும் அன்பு செலுத்துவதற்கும் தன்னைத் தயாரித்துக்கொள்கிறாள். அது தோல்வியில் முடியும் பொழுது உடல் மற்றும் மனரீதியாக உணர்ச்சிக்கு ஆளாகிறாள்.



ஒரு பெண் இன்னொரு பெண்ணுடன் தன் கணவனைப் பகிர்ந்துகொள்ள நேரும்பொழுது பின்வரும் நான்கு வழிகளைக் கடை பிடிக்கிறாள்.

1. மற்றொரு பெண்ணின் இடத்தையும் இணைத்து பொறுமிக்கொண்டே இணைந்திருத்தல்

2. தன் கணவன் தனக்கு மட்டுமே என்று ஆக்குவது.

3. தன் உரிமையை நிலைநாட்ட, ஊடுருவலைத் தூக்கி எறிய, உறவு, குடும்பம், சட்டம் முதலியவற்றையும் பயன்படுத்துதல்.

4. முற்றிலுமாக துடைத்தெறிந்துவிட்டு (முன்னதை) புதிய உறவை மறுபடி தனக்கென்று தேர்ந்தெடுத்தல்.

தைரியமும் துணிவும் உள்ளவர்கள் மூன்று அல்லது நான்காவதைத் தேர்ந்தெடுப்பார்கள்.

ஆண்- பெண் உறவு என்பது முழுக்க முழுக்க பரஸ்பர நம்பிக்கையில் உருவாகிறது. நட்பு, நம்பிக்கை, திறந்த மனப்பாண்மை- இவைகள் உறவுக்கு பாலமாக அமையும். நெருக்கமான ஒவ்வொரு உறவுக்கும் நம்பிக்கை என்பதுதான் முதன்மையான அஸ்திவாரம்.

சந்தேகம் உறவின் முடிவுக்கு வழிவகுக்கும். பயமே அதிகமான சந்தேகத்திற்கு இடமளிக்கிறது. பயம் எவ் வகையினதாயினும் சந்தேகத்தின் மூலம் தீய உணர்வுகளைக் கொல்ல ஆரம்பிக்கும். சந்தேகம் முளைக்க அது உறவை விரிசலாக்கும். இனிக்கும் உறவுகள் கசக்க ஆரம்பிக்கும். சந்தேகம் அநேகமாக ஆதாரமற்றதாகவும் ஊகங்களின் அடைப்படையிலுமே முளைக்கின்றன. அதுவே நாட்பட நாட்பட தீர்மானமான நம்பிக்கையை அளிக்கிறது.

காதல் என்பது மிக வீர்யமான ஆக்க உணர்வு. எனவே, இரு உடல்களின்



அ.வெண்ணிலா



ஆர்.வத்ஸலா



சுகந்தி சுப்பிரமணியன்



குட்டி ரேவதி



உமா மகேஸ்வரி



சல்மா

இணைப்பு என்பது தத்தம் தனி இடங்களை அழித்து இருவரின் பொது இடத்தை தயாரிக்க பெரிதும் உதவுகிறது. இருவரின் நெருக்கம் என்பது அவர்களின் உணர்வுப்பூர்வமாக இணைதலிலும் உண்டு.

அழுத்தங்கள் அது எவ்வகையினதாயினும் அவைகள் உறவில் வலியையும் வேதனையையும் ஏற்படுத்தும். இவைகள் நாம் அறியாமலே காரணங்களைத் தேடியெடுத்து நம்பிக்கை யின்மைக்கானதாக ஆழ் மனத்துக்குள் அடுக்கி வைக்கும். அவைகள் ஏதாவது உணர்வுச் சிக்கல் சமயத்தில் வெடித்து உள்ளிருப்பவைகள் அனைத்தும் ஒருசேர வீசி எறியப்படும். அடுத்தவரின் முகம் மீது இது தீர்மானிக்கப்பட்ட செய்கை அல்ல. எனினும், சந்தர்ப்பங்களில் கொட்டித் தீர்த்துக் காலியாக்கும். பல சந்தர்ப்பங்களில் உறவுகளை பாழடையச் செய்யும்.

உணர்வு பிணைப்பு என்பது உணர்வு ஏற்பின் ஆரம்பம். உணர்வுகள் இணையாத போது எதிர் மறையான விளைவுகளும் ஏற்படுவது உண்டு. நெருக்கடிகளால், ஒருவருக்கொருவர் மன அழுத்தம் ஏற்படும் போது பெரும்பாலும் மனைவியை கணவன் மனோ வைத்தியரிடம் கூட்டிச் சென்று சிகிச்சை அளிப்பது வழக்கம். ஆனால், மனைவியோ கணவனைத்தான் அந்த நிலையில் காண்கிறாள். எதிர்மாறாகவும் இது கணவனுக்கு நிகழ்ந்ததாகவும் சில சமயம் அமைகிறது. எது எப்படியாயினும் ஒருவர் தவறு தன்னுடையதல்ல அடுத்தவருடையது என்று காண்பிப்பதற்கான முயற்சியிலேயே இது அமைகிறது. ஆனால், இது இருவரையுமே மன அழுத்தத்திற்கு ஆளாகும் நிலையை ஏற்படுத்துகிறது. இடம்பெயர்வதால் காரணம் அழிவதில்லை, துயரம் தொடர்கிறது.

மன அழுத்தம் அதிகமாகி விரக்திக்கு ஆளாகும் போது மனிதன் வன்முறைக்குத் தாவுகிறான். பெரும்பாலான சமயங்களில் கண்வன் தான் தன்னுடைய மன அழுத்தத்திலிருந்து விடுபடவும் தனது தவற்றை மூடி மறைக்கவும் வன்முறையில் ஈடுபட்டு மனைவியைத் துன்புறுத்துகிறான். ஆண் தன்னுடைய எரிச்சலையும் வெடிப்பையும் வெளிப்படுத்த வன்முறையைக் கையாள்கிறான். குடிபோதையில் மட்டுமின்றி அதைவிட வலிமையாக போதையற்ற போதும் பெண் மீது வன்முறையைப் பயன்படுத்துகிறான். இது ஏழை, படிப்பற்றவர் மட்டுமல்லாது படித்த மத்தியதர உயர்தர கணவன்மார்களிடமும் பரவலாக காணக் கிடைக்கிறது. படித்த, வேலைக்குச் செல்லும் பணக்காரப் பெண் உட்பட அனைத்துப் பெண்களுக்கும் இந்நிலை ஏற்படுகிறது.

தாழ்வு மனப்பான்மையும் வன்முறைக்குக் காரணம். காரணங்கள் ஏதுமின்றி தனது உயர்நிலையை பறைசாற்றிக் கொள்ளவும் கூட ஆண்கள் வன்முறையைக் கையாள்கின்றனர். தனது உயர்வை ஸ்தாபித்துக்கொள்ள இதுவொருவழியென எண்ணுகின்றனர். சில சயங்களில் ஆண்களின் வெளிப்புற பாதிப்பு தாழ்வு மனப்பன்மைகளுக்கும் மனைவியிடம் வன்முறைப் பிரயோகமாகிறது. மனைவியின் தன்மானத்திற்கான அடியாக அவைகள் விழுகின்றன. அது கணவனுக்கு குரூரத்திருப்தியையும் மனச் சாந்தியையும் அளிக்கிறது.

குடும்ப வெளியில் கணவன் துணைவனாக அமையாமல் ஆணாதிக்கம் நேரடியாகவோ மறைமுகமாகவோ அழுத்த ஆரம்பிக்கும் போது மூச்சுத் திணறல் பெண்களுக்கு ஏற்படுகிறது. இதைப் பொறுக்க இயலாமல் போகும் போது பெண் உறவு முறிவுக்குத் தயாராகிறாள். ஆனால், சமூகம் கணவுடனான உறவு முறிந்த பெண்ணை விதவைக்கு ஏற்பப் பார்க்கிறது. அல்லது அவளின் நடத்தையைச் சந்தேகம் கொள்கிறது. இதனிடையே தனது குழந்தைகளை இந்தச் சமூகத்தினுள் செலுத்தி இந்த சமூகத்தில் அவர்களையும் ஒரு அங்கமாக ஆக்க பெண் மிகவும் பாடுபடவேண்டி இருக்கிறது. தற்காலத்தில் இந்த நிலை சிறிது சிறிதாக மாறி வருகிறது என்றாலும் கூட இந்த மாற்றம் இன்னமும் வெகு தூரம் பயணப்பட வேண்டும்.

உறவு முறிவில் பெண்கள் மட்டுமே கணவன்-மனைவி இருவருக்குமான உறவின் அடையாளமாய்ப் பிறந்த குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டிய துர்பாக்யத்திற்கு ஆளாகின்றனர். இது எல்லா நாட்டிலும் பொதுவானது. வளரும் பிள்ளைகளின் கேள்விகளையும் அவர்களால் ஏற்படும் பிரச்சனைகளையும் கூட பெண்ணே தனியே சமாளிக்க வேண்டி வருகிறது. விலகி வாழும் பெண்கள் வளர்க்கும் குழந்தைகள் 'அப்பா' பற்றிக் கேட்கும் கேள்விகள் ஆயிரம். தாய் மீது தவறு இருக்கலாம் என எண்ணி 'பொய்மான்' தந்தை

யிடம் செல்லக்கூட எத்தனிக்கலாம். அந்த பதின்ம வயதில் குழந்தைகள் மனத்தைத் தன்வசம் இழுக்க பல ஆண்கள் முயல்கிறார்கள். எல்லாவற்றிற்கும் ஈடு கொடுக்கும் மனித இயந்திரமாய் மாற வேண்டிய நிலைக்கு ஆளாகிறாள், பெண்.

இனி, இவை எப்படியெல்லாம் மனித மனங்களில் வெளிப்படுகிறது, அது கவிதையில் கருவாக உருவாகும் விதம், பெண்களின் பார்வை குறித்து, நவீன கவிஞர்களின் கவிதைகளுடன் காணலாம்.

அ. வெண்ணிலாவின் கவிதை இது. தலைப்பில்லா கவிதை. மாதவிடாய் காலங்களில் பெண்கள் படும் அவஸ்தையை சொல்கிறது. ஆண்களால் பார்க்கப்படும் பெண் உடல் வெறும் புழங்கு சாதனம். அம்மாவும் மற்றவர்களும் கூட இது போன்ற பெண்ணின் உணர்வுகளைப் புரிந்துகொள்ளாமல் எட்டி நிற்கச் சொல்லும் போது ஏற்படும் வேதனை, புரியாமை என அனைத்தும் இதில் இருக்கின்றன. 'அம்மா ஒரு கொலை செய்தாள்' என்ற அம்பையின் சிறுகதையிலும் வலிமை மிக்க வீரியமான சொற்கள் கொண்டு இதுவே சொல்லப்பட்டிருக்கும். எல்லாப் பெண்களுக்கும் இது ஒரு அனுபவமாகும். தொழிலாளி ஆயினும் வலிகளோடுதான் அந்த நாட்களின் பொழுது கழியும்.

ஈரப் பிசுபிசுப்போடு
உடகார்ந்திருப்பீர்களா

ரத்தப் பெருக்கோடு
உறங்க வேண்டி இருக்கு

மனதை மட்டும் தூக்கிக் கொண்டு
அலைகிறீர்கள் தானே

கட்டுகள் ஒழிந்து என்றாவது
விட முடிந்திருக்கிறதா
இந்த உடம்பை

தளர்ந்து போனால்
தாங்க மடி வேண்டும்தானே

அடிவயிற்றில்
பிரபஞ்ச பூதத்தின்
மூலாதார அவஸ்தையோடு

பிறப்பின் வாசம்
உடலெங்கும் பரவி நிற்க

ரத்தம் தோய்ந்த ஆடைகளோடும்
நடுங்கும் கால்களோடும்
சாய்ந்து கொள்ள துழாவுகிறோம்

'தொடாதே', 'தள்ளி நில்'
என்கிறாள் அம்மாவும்

எறும்புக்கும் நாய்க்கும்
எப்படி இருக்குமோ இந்த அவஸ்தை.

வத்சலாவின் கவிதை இது. இதை வாசித்தால் பெண்ணின் நிம்மதி பெருமூச்சின் அர்த்தம் புரியும்.

பெண் திருமணத்தை எதிர்பார்ப்போடு எதிர்கொள்கிறாள். அது ஏதுமற்று அழியும் தருணம் மேலேறி மீண்டு வந்து புதுக் காற்றை சுவாசிக்கிறாள். கடந்து வந்த பாதையின் ரணங்கள், உயரம் தாண்டி மீண்டு வந்து மறந்தும் போனது குறித்து அதிசயமும் அதே சமயம் மகிழ்ச்சியும் கொள்கிறாள். அதைப் பற்றிய கவிதை இது.

தலைப்பு: 'விடுதலை'

இன்றுதான் நினைவுக்கு வந்தது
நேற்று அந்த நாள் என

கைகள் கசகசக்க்
பூச்சுமை தலை அழுத்த
புகை கண்களைக் குருடாக்க
அரை மயக்கத்தில்
புரியாத மொழியில்
திணிக்கப்பட்ட சத்யங்களை
ஏற்றுக் கொண்ட நாள்
ஆண்டுதோறும்
துக்கங்களைச் சுமந்து வந்து
மனதை ரணமாக்கிப் போகும் நாள்

அக்னி சாட்சியை
நீதி மன்றம் ஒதுக்கியும்
நெஞ்சில் மூண்ட தீய
நெஞ்சுரம் அனைத்தும்
மனக் கொப்புளங்களைக் கீறி
சீழ் வடிய வைக்கும் நாள்

இழந்த ஒரு துணைக்கு ஈடாக
ஓராயிரம் தோழமைகள் பெற்றும்
உயரங்கள் தாண்டியும்
காயங்கள் காய்ந்தும்
தோல் தடித்தும்
நெஞ்சம் நிறைந்தும்

விடிந்ததும்
ஒரு வினாடி
அடிவயிற்றில் சில்லிட வைக்கும்
அந்த நாள்
நேற்று முதன் முறையாய்
மறந்தே போனது.

சுகந்தி சுப்ரமணியத்தின் கவிதை இது. வாழ்ந்த வாழ்க்கையின் முற்பகுதி அனைத்தும் விட்டு அகன்று, மனம் பதிவுகளற்றுப் போனபோது, ஏதும் தெரியாதென்று உணரும் பெண் ஆனதாக அமைந்துள்ளது இந்தக் கவிதை. மனம் மேலெழும்பி நினைவலைகளைக் கொணர்கிறது, கேள்விகளாக. ஆனால், அதற்கான பதிலை வெள்ளைத்தாளாய் இருக்கும் இறந்த காலத்தில் இருந்து கவிஞரால் பெயர்த்தெடுக்க முடியாமல் போகிறது. நினைவும் கனவும் இறந்த காலமும் மறதியும் நினைவும் என எதிரெதிர் வார்த்தைகள் மனத்தினுள் மோதி உண்டாகும் வெடிப்பு இது.

என் குழந்தையின்
தொப்புள் கொடியை
அறுத்தது யார்?
பாட்டியா, அத்தையா?
நினைவில்லை.

என் முதல் கர்ப்பம்
பற்றிய முதல் செய்தியை
யாரிடம் சொன்னேன்?
ஞாபகமில்லை.

பள்ளியில் அ, ஆ, இ, ஈ
கற்றுக் கொடுத்த
ஆசிரியர் யார்?
மறந்து போனது.

பள்ளி மைதானத்தில்
விளையாடும் போது
ருதுவான கணத்தில்
என் கையைப் பிடித்து
சந்தோஷம் சொன்ன முகம் எது?
நினைவில்லை.

சட்டென செத்துப் போன அப்பா
எனக்காக விட்டுப்போன வார்த்தைகள்
அவை என்ன?
நினைவில்லை.

முதல் பிரசவம் குறித்து
பயமுறுத்திச் சொன்னவர் யார்?
மறந்து போனது

பாஷை புரியாத ஊரில்
புது பாஷையில்
முதலில் கேட்ட பெண்?

நீள்கிறது நினைவின்மை
ஏதோ ஒரு வகையில்
எல்லாவற்றிகும்
முக்கியத்துவம் இருந்தும்.

குட்டி ரேவதியின் கவிதை 'கொடுக்கு.'

பெண் உடல் என்றும் எங்கும், வெறும் உடலாகப் பார்க்கப்படுவதும், அதை பயன்படுத்துதலுமாய்க் கழிவதை கூறும் கவிதை இது. ஒருவர் கூறுவதாய் இருந்தாலும் அனைத்துப் பெண்களையும் உடல் சார்ந்தே பார்க்கும் பார்வையைக் கூறுகிறது.

பெண் உடல் தாங்கிய எவ்வுயிர்க்கும் எல்லா வெளிகளும் சொந்தமற்றுப் போகின்றன. அவள் தான் செல்லும் இடமெங்கும் உடம்பை சுமந்து செல்கிறாள். இவ்வுடல் உடனிருப்போருக்கும் எதிர்ப்படுவோருக்கும் கடந்து செல்வோருக்கும் உரித்தானதாகிறது.

சொல்லின் முள் ஒன்று தந்தாய்
மீனின் முள்ளையோ தாவர முள்ளையோ
ஒத்திராதது;
சதைக்குள் இறங்கிய அக்கொடுக்கை
விட்டோடியே பறந்தது குளவி
கடுக்கின்றன
என் விசேஷ உறுப்புகளான
கண்களும் முலைகளும் யோனியும்
அழியாத வலியின் சாயலெல்லாம்
கொடுக்குத்தானோ?

உமா மகேஸ்வரியின் கவிதை.. அம்பையின் 'வீட்டில் மூலையில் ஒரு சமையல் அறை' சிறுகதையைப் போன்றது. பெண் என்பவளின் வீடு சமையல் அறை ஆகிப் போகிறது. அவளது ராஜ்யம் அந்தச் சுவற்றிற்குள் ஆரம்பித்து அதிலேயே அழிகிறது. இது எனது மட்டுமல்ல என் பரம்பரைக்கானது. அதனடுத்து வரும் வம்சத்திற்கானது. தோசைக் கல்லில் இட்ட மாவுக்கு ஒப்ப எங்கும் வழிந்துவிடாது அதனுள்ளேயே வேகும் பெண்மை. குமையும் புகைக்குள் வலம் வரும் வாழ்க்கை. இதன் துணை

*இல்லாமல் போனதாலேயே எதிர்பார்ப்புகள் ஏமாற்றம் கொண்டதாலேயே, சுடும் உலோகத் தகடாய் ஆனாலும் வெந்து தணியும் பதமாய்ப் பெண்ணும்..*

*தலைப்பு: 'தோசை'*

ஆண்டாண்டு காலமாக அளவு மாறாதது
தோசைகளின் விட்டம்.
விளிம்பு தாண்டாதது அவற்றின் வட்டம்
உலோகம் கடின அடித்தளத்தில்
ஊற்றப்பட்டாலும் அவை
ஒருபோதும் இழப்பதில்லை மென்மையை
விரிவும் திருப்பமுமற்ற
வெற்று அழற்சி.
எதனோடும் இழைந்து போகும் சுயமின்மை
இழப்பின் விதிப்பற்று
மூடிக்குள் புழுங்கி வேகும்.
உள்ளே வெந்தாலும்
வெளிக்காட்டாத பொன் முறுவல் மேலே
சுருட்டித் திருப்புகையில்
சோர்ந்த முனகலின்றி
வேறேதும் சொல்லாதவை
நகர்த்தவில்லை அவற்றை
நவீன வகைப்படுத்துதல்கள்
நிஜமான சுதந்திரத்துள்
வாழும் வாழ்தலற்று.
அம்மாவின் பாட்டியின்
பாட்டியின் அம்மாவின்
இன்னும் என்னுடைய தோசைகள்
ஆண்டாண்டு காலமாய் அப்படியே.

*இது சல்மாவின் கவிதை.*

*தான் பார்த்துத் தன் வயிற்றில் வளர்த்து சீராட்டி வளர்த்த ஆண் பிள்ளை அன்னை அறியாமலேயே வளர்ந்து ஆணாகி விடுகிறான். இன்று அவனுக்கு அம்மாவின் பொய்களும் தேவை யில்லை, அம்மாவின் அருகாமையும் தேவையில்லை. பிள்ளைகள் வளர்ந்தால் அவர்களும் ஆண்களாகி விடுகின்றனர். ஆனால், அன்னைக்கும் மகளுக்குமான உறவு இரு பெண்களிடையே ஏற்படும் நட்பைப் போன்று பல கிளைகள் விட்டு வளர்வதும் உண்டு.*

*குடும்பத்தின் சூழல், அங்கு ஆண்-பெண்களிடையே ஏற்படும் இடைவெளி, போலி சமூக மதிப்பீடுகள் என பல தளங்களில் இயங்கும் கவிதை இது.*

*தலைப்பு: 'நானில்லாத அவனது உலகம்'*

சமீப காலமாய்
எங்களுக்கு இல்லை
ஒரு நெருக்கமும்
நானே முயன்றும் கூட
நெருங்க முடிவதில்லை
அவனை.

இழுத்து அணைத்து
முகர எத்தணிக்கையில்
என் மார்பகங்களின் ஸ்பரிசத்தில்
கூசி விலகி நிற்கிறான்
அது உதிரம் பிரித்து
உணவூட்டியதென்பது மறந்து

நதியோரக் கோரையாய்
குத்திட்டு நிற்கும் முடி சீவ
நீளும் என் கை விலக்கிச் செல்கிறான்
சங்கடமின்றி

நிலவற்ற பொழுதில்
இருள்
கைவீசித் திரிவது போல
நான் மறைத்து வைத்த வெளிகளில்
நுழைந்து வீடு திரும்புகிறான்

நான் சொல்லி முடித்த
கதைகள் மீள அநேகக் கதைகளை
பொறுக்கி எடுத்தபடி
அவற்றில் எதையும் சொல்லுவதில்லை
தனது குழந்தைப் பருவத்தை
துடித்துக் கடந்த அவனும்
கைப்பற்ற நானும்
போராட்டத்தினூடே தேய்வற்றுக்
கரைகிறது பழைய நெருக்கம்

நிலவு ஓய்ந்திருக்கும் நாளொன்றில்
சூரியன் ஒரு நாள்
தீர்ந்து போகுமோ எனக்
கேட்டவனுக்கு
என்னிடம் அறிந்து கொள்ள
இன்றொரு பதிலுமில்லை

எனதறை அண்டி வாழும் இருள்
இன்றும்
உள் நுழைய கேட்கையில்
தாய்மையுற்ற முதல் பொழுதில்
இனி இங்கு ஒளி அலம்பி
பின் தேங்கும் எனக் கண்ட கனவொன்றை
திருப்பி அனுப்பிக் கொண்டிருந்தேன்.

*(தொடரும்)*

# ரமேஷ் பிரேதன் கவிதைகள்

**ஓவியம்: நடேஷ்**



*லிங்கமையவாதி*

*பனிமூட்டத்தில் நிற்கும் யானையைப் போல மங்கலாகத் தெரிகிறது உனது பேருரு என்று சொன்னான். கவித்துவமான வாக்கியங்களால் என்னைப் புணர்ந்துவிடலாம் என்று மனப்பால் குடிக்கும் பூனையாக எனது கால்களை வளைய வருகிறான். மேலோட்டமான நோக்கில் என்னுள் புதைந்திருக்கும் ஆண் அடையாளத்தைக் காண யியலாது எனச் சொல்லுபவன், அடியாழம் வரை மூழ்கி மண்ணைத் தோண்டி உட்குடைந்து முடிவில்லா ஆழ்வெளியில் உயிர்கள் வாழமுடியாத வெறுமையில் துலங்கும் என் தொல்லுருவம் ஆணாகவிருக்கும் என்பான். எனக்குத் தெரியும், இதுவரை ஒருநாள்கூட முழுமையானப் பெண்ணாக அவன் என்னைக் கலந்ததில்லை.*



*மாந்தவுயிரி வெறும் உடம்பால் மட்டுமே ஆனதாயிருந்தால் எல்லோரும் தனிமாந்தராக வாழ்ந்திருப்பர். உடம்பைத் தாண்டிய உள்ளம் என்னும் தொகுப்பறிவு குமுகமாதல் என்னும் கருத்தமைவைக் கட்டமைப்பதால் கைக்கலப்பு, வாய்த்தகராறு என முடிந்துபோகவேண்டிய சண்டை, போர், உலகப் போர் என விரிவடைகிறது. உடம்பின் கட்டமைப்பைக் குலைப்பதின் மூலம் உள்ளத்தின் ஒழுங்கமைவைச் சீர்குலைக்கலாம். அரசியல் சாரா தொகுப்பறிவை கட்டமைக்க பாலடையாளம்சாரா குமுகவுடம்பைக் கட்டமைக்க வேண்டும். அரசியலற்ற பாலற்ற உடம்பே அதிகார மேலாதிக்கத்திற்கு எதிராகத் தன்னை எதிர் நிறுத்தும். எனது அரசியல் நடவடிக்கைகளை அவனால் பின்தொடர முடியவில்லை.*

*இருமை எதிர்நிலை அரசியலைக்*

கலைத்து பன்முக அரசியலைக் கடமைக்க வேண்டும். உடம்பே கோட்பாடு,உடம்பே ஆயுதம்; ஆம்,உடம்பைத் தாண்டிய அறிவு இதுவரை கட்டமையவில்லை. எனது அரசியல் செயல்பாட்டை எனது உடம்பிலிருந்துத் தொடங்குகிறேன். எனது உடம்பைப் பால் துறந்த ஆயுதமாகப் பொதுக்குமுகத்தின் முன் நிறுத்துகிறேன். ஆபெண்ணிலை என்பது பால்சார்ந்த வெற்றிடத்தால் உருவாவது என்ற பொதுஅறிவுக்கு எதிராக என் உடம்பால் மூன்றாம் அரசியலைப் பேசுகிறேன். எனது அரசியல் நிலைப்பாடு அவனை அச்சுறுத்துகிறது. ஆபெண்ணிலையை ஆண்குறிமைய அரசியலுக்குள் இடப்படுத்த முனைகிறான். குமுகத்தின் பெண் பற்றாகுறையைப் போக்க ஆணைப் பெண்ணாக்கும் தொழில்நுட்ப விளைவாக என்னைப் பார்க்கிறான். அவனைப் பார்த்துச் சிரித்துவிட்டு நகர்வதைத் தவிர எனக்கு வேறுவழித் தெரியவில்லை.

உடம்புறவின் மூன்றாம் பரிமாணத்தை என்னுடம்பில் தேடுகிறான். இருப்பதைச் சீர்திருத்தி வைக்கும் பாலரசியல் சீர்திருத்தவாதி நானில்லை. பழக்கப்பட்ட காமத்தை என்னிடம் எதிர்பார்த்தால் ஏமாந்து போவான். என்னுடம்பில் செயல்படும் ஆண்மைய அரசியலைச் செயலிழக்க வைக்க பெண் வேடத்தைப் புனைந்தேன். என்னைப் புணர்வ திலில்லை வாசிப்பதிலேயே இன்பம் பேரின்பமாக வளரும். இதை எடுத்துச்சொன்ன என்னைப் பரிதாபமாகப் பார்க்கிறான். பெண்ணைவிட ஆபெண் சிக்கலானவள் என்ற இயல்நிலை தெளிவாகும்போது, அவன் இன்னும் அபரிமிதமாக என்னை அணையலாம், அன்றி என்னைவிட்டு விலகலாம். இசைபட காதல் செய்ய நான் ஏதுவானவளில்லை. வெட்டவெளியில் சிறு குன்றின் உச்சியில் அம்மணமாக நிற்கிறேன். என்னைச் சுற்றி பார்வைக்கு எட்டிய தூரம் வரை செம்மணல் பரப்பு. தொடுவானில் விழுகதிர் பொழுதோடு தரையிறங்குகிறது. எனது அம்மண உடம்பு கோணல் மாணலாகப் பொருத்தப்பட்டு, என்னை நானே பார்க்க அச்சமூட்டுவதாக உள்ளது. தண்டுவடம் நேர்க்குத்தாக ஓகத்தில் நிலைக்க, ஆயிரம் கைகளால் என்னை அள்ளி இரவு தனக்குள் புதைக்கிறது.

## சதுரங்க ஆட்டம்

யாருக்காகவோ காத்திருக்கிறேன். யாருக்காகக் காத்திருக்கிறேன் என இன்று வரை தெரியவில்லை. உயிர் வாழ்தலே காத்திருப்பதற்காகத்தான் எனத் தோன்றுகிறது. காத்திருப்பின் வாதை ஒருவகையான போதையாக உடம்பையும் உள்ளத்தையும் ஆக்கிரமிக்கிறது. காத்திருப்பின் நோக்கமும் தெளிவாகத் தெரியவில்லை. இரைக்காக வேட்டை விலங்கு காத்திருப்பதைப் போல் இல்லை; குட்டையின் நன்னீர் வெயிலில் படிப்படியாக வற்றி இறுதியில் சேறும் இறுகிவர, இறப்பை வென்றெடுக்கும் பருவ மழையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் குரவை மீனைப்போல இருக்கிறேன். இறுகியச் சேற்றில் கால்த்தடம் விடுத்து நீரிருக்கும் திசைநோக்கிப் பறக்கும் கொக்கின் நினைவில் இடம்பெயர்ந்து கொண்டிருப்பேனா ?

பிரிவின் தூரம் எவ்வளவோ அதைக் காத்திருப்பால் நிரப்பிக் கொண்டிருக்கிறேன். காத்திருக்கும் பொழுதில் நான் என்னிடத்தில் இல்லாமல் மற்ற எல்லா இடங்களிலும் இருக்கிறேன். பெரும்பாலும் நான் காத்திருப்பது எனக்காகத்தானோ என்ற ஐயமும் எனக்கிருக்கிறது. வரலாற்றில் யாரோ யாருக்காகவோ காத்திருந்ததைப் பற்றி / காத்திருப்பதை பற்றி யாருக்கும் கேள்வியில்லை. நான் யாருக்காகவோ காத்திருப்பதை நான் மட்டுமே அறிவேன். காத்திருக்கும்போது சிந்தனை அங்கும் இங்கும் அலையாமல் ஒரு புள்ளியில் உறைகிறது; உள்ளில் பெருகும் அநாதைத் தனம், அனைத்தும் அற்றுப்போன இருப்பாக என்னை உணர வைக்கிறது. பால் மாறியப் பெண்ணுடம்பில் இருந்துகொண்டு இந்த உடம்புக்குச் சொந்தமானப் பழைய ஆணை எதிர்பார்த்துக் காத்திருக்கிறேனோ ? இந்த உடம்புக்குரியவன் திரும்பிவந்து தான் எங்கே என்று கேட்டால் நான் என்ன பதில் சொல்வேன் ?

அவனைக் கொன்றுவிட்டு அந்த உடலில் என்னை உடுத்திக்கொண்டு, அவனுக்காகக் காத்திருப்பதாக நாடகமாடுகிறேனா ? ஒற்றை உடம்புக்கு இரட்டை உட்கட்டமைப்புகள். இரண்டு மனம்; ஆண் மனம், பெண் மனம்; ஒன்றையொன்று முரண்படும்போது, ஒன்றையொன்று கொல்லத் துணியும்போது நான் தற்கொலைக்குத் தள்ளப்படுகிறேன். வளர்பிறை நாட்களில் அவளாக இருந்து அவனுக்காகக் காத்திருப்பதும் தேய்பிறை நாட்களில் அவனாக இருந்து அவளுக்காகக் காத்திருப்பதும், ஒற்றை உடம்புக்குள் இரு பால் வாழ்க்கை. இந்த உடம்பின் பாலைக் கடக்க நினைத்தேன், ஆனால் இன்னுமொரு பாலைக் கூடுதலாகச் சேர்த்துக் கொண்டேன். என்னை இரண்டாகப் பிளந்து ஒன்றையொன்று சுட்டுக் கொண்டு சாகத் துணிகிறேன்.

இவ்வகை மனப்பிளவும் மனப்பிறழ்வும் என்னை வதைக்கின்றன. ஆணாக உறங்கி, பெண்ணாக விழிக்கிறேன். இமைக்கும்பொழுதில் பால் மாறுகிறேன். மனத்துக்கண் பெண்ணாகி கண்ணாடிமுன் நிற்க ஆணாகத் தெரிகிறேன். சதுரங்கப் பலகையின் கறுப்பு வெள்ளைக் கட்டங்களில் எதிரும் புதிருமாக நானே எல்லாமாகி நிற்கிறேன். இந்த வலியிலிருந்து நான் வெளியேற வேண்டும். என்னை யாரேனும் வந்து வெளியேற்றுவார் எனக் காத்திருக்கிறேன். காதலன் காதலிக்காக காதலி காதலனுக்காகக் காத்திருப்பதைப் போல நானே எனக்காக எனக்குள் காத்திருக்கிறேன். காதிருப்பதில் கவித்துவமில்லை. பாலைநிலக் கள்ளிக்காட்டில், மகப்பேறு மருத்துவமனையிலிருந்து நிணஈரம் காயாதக் குழவிகள் அள்ளிவந்துக் கொட்டப்படுகின்றன. இந்த நிலப்பகுதியில்



நூற்றாண்டிற்குமுன் அற்றுப்போன வல்லூறுகள் மோப்பமுற்று எங்கிருந்தோ பறந்துவருகின்றன.

## பூனைப் பால்

நானொரு பூனை வளர்த்தேன். மார்கழி வாசலில் வண்ணக் கோலத்தில் புரண்டெழுந்தது போன்ற தோற்றம். ஏழு நிறங்களாலமைந்த கண்ணாடிப் பூனை. அது புணர்ச்சி அறியாத ஆண்; வாசலைத் தாண்டி வெளியில் சென்றதில்லை. நிறைமதி இரவில் மொட்டைமாடியில் தனது முன்னங்கால்களால் நிலாவை உருட்டி விளையாடும். என்னைப்போலவே அதற்கும் உள்ளூரில் நண்பர்கள் யாருமில்லை. தோட்டத்து மண்ணில் பள்ளம் பறித்து மலம் கழித்து மூடும். அருகம்புல்லைத் தின்று கக்கி வயிற்றிலுள்ள அழுக்கை அகற்றும். வேலியில் ஓடும் ஓணானை வேட்டையாடும். தும்பையில் அமரும் வண்ணாத்தியைத்தாவிக்கவ்வும். அகப்படும் எலியைக் கொல்லாமல் உயிர் பயத்தில் இருத்தி தப்பிக்கவிட்டு துரத்திப்பிடித்து விளையாடும். என்னோடு ஒருவாரம் தங்கிச்சென்ற திருநம்பித்தோழன் அதைத்திருநங்கைப் பூனை எனக் குறிப்பிட்டான். ஆம், அது பாலிச்சை யின்றி என்னையே வளையவரும்.

பூனைகளின் காமம் வன்முறையில் தணியும். ஒன்றையொன்று கடித்துக்குதறி கத்திக் கதறி நிகழ்த்தும் கலவி, இரவில் ஊரைத் தூங்கவிடாது. இந்தப் பூனை அந்தக் கூச்சலில் மருண்டு போர்வைக்குள் புகுந்து எனது தொடைகளின் நடுவில் முகம் புதைத்துத் தூங்கிவிடும். திருநம்பித் தோழன் இப்படித்தான் என்னுடன் தூங்குவான். அவனுக்கு ஆண்குறி இல்லை; எனக்குப் பெண்குறி இல்லை. இருவரையும் இந்தப் பூனை உருட்டி விளையாடும். ஒரு துண்டு வானவில் முகத்திலிருந்து வால்முனைவரை படிந்ததுபோன்ற உருவம். கண்ணாடி உடம்புக்குள் ஒளி ஊடுருவி வீட்டின் உள் சுவர்களில் மோதித் தெறிக்கும். கடலுக்குள் மூழ்கிக் கண் திறந்துப் பார்ப்பதைப்போல் எல்லாம் துலங்கும். அங்குமிங்கும் அலையும் பூனை வீட்டை ஒரு நீர்க்குமிழியாக மாற்றி அதற்குள் என்னை வைத்து அழகுபார்க்கும்.

பூனையை நான் வளர்க்கிறேனா என்னைப் பூனை வளர்க்கிறதா என்ற ஐயம் எழுவதுண்டு. அதுவோர் ஆண் பூனை எனினும் அதன் பார்வையில் சுரக்கும் தாய்மை என்னைக் குழந்தையாக்குகிறது. அதன் குழந்தைமை என்னைத் தாயாக உணரவைக்கிறது. ஒவ்வொரு பொழுதும் வெவ்வேறாக என் உள்ளப்போக்கை மாற்றிமாற்றி கட்டமைக்கிறது. நாட்டிலிருப்பதால் பூனை, காட்டில் வாழ நேர்ந்திருந்தால் புலியை உடனிருப்பாகக் கொண்டிருப்பேன். விலங்குகளுடன் மனிதர் உறவாடும்போது ஒருவகை மாயயெதார்த்த வாழ்வியல் இயற்கையால் கற்பிக்கப்படுகிறது. மனிதர் தம்மை விலங்காக உணரும்போது இயற்கையுடன் இரண்டறக் கலக்கிறார். நான் இயற்கையுடன் ஐக்கியமாகும்போது பால் வரையறையைக் கடக்கிறேன். பால் கடந்த இருப்பாக உணரும்போது குமுகம் கட்டமைத்த பாலொருமையைக் குலைக்கிறேன்.

மியாவ் என்ற ஓரசைச் சொல்லால் அமைந்த ஒரு மொழியால் என்னுடன் உரையாடுகிறது. ஒற்றைச் சொல்லாலான மொழி உலகில் வேறுண்டா எனத் தெரியவில்லை. அந்த ஓசையைக் கூர்ந்துச் செவியுற்றால் அதனுள் சிறுசிறு ஒலி வேறுபாடு புலப்படுகிறது. பூனை பேசுவதை எனது மொழியில் பெயர்த்தறியும்போது எனக்கும் அதற்கும் இடைவெளி குறையும்; மியாவ் என்ற ஒலியைத் தமிழ்ப்படுத்தும்போது அச்சொல்லுக்கு வால் முளைக்கும்.

ரமேஷ் பிரேதன் <rameshpredan@gmail.com>

# எஸ்.வி.எஸ். என்னும் மாமனிதர்

பாவண்ணன்

காந்தியத்தின் மீது ஈடுபாடு கொண்ட மூத்த பத்திரிகையாசிரியரும் கட்டுரையாளருமான அ. இராமசாமி அவர்களின் நூற்றாண்டையொட்டி, அவர் எழுதிய 'தமிழ்நாட்டில் காந்தி' என்னும் நூலை சந்தியா பதிப்பகம் சிறப்புப் பதிப்பாக வெளியிட்டது. அந்தப் புத்தகத்தின் வெளியீட்டு விழா 07.07.2023 அன்று சென்னையில் காந்தி கல்வி மையத்தில் நடைபெற்றது. நான் அவ்விழாவில் கலந்துகொள்வதற்காக சென்னைக்குச் சென்றிருந்தேன்.

விழா நடைபெற்றுக் கொண்டிருந்த தருணத்தில் விட்டடல்ராவிடமிருந்து கைப்பேசியில் எனக்கு ஓர் அழைப்பு வந்தது. நிகழ்ச்சி நடைபெற்ற சமயத்தில் ஒலியெழாதபடி கைப்பேசியை அமைதி நிலையில் பைக்குள் வைத்திருந்ததால், நான் அதைக் கவனிக்கவில்லை. நிகழ்ச்சி முடிவடைந்து பேருந்து நிலையத்துக்குத் திரும்பிய பிறகே கவனித்தேன். அப்போது நேரம் இரவு பத்தரையைக் கடந்துவிட்டது. அதனால், மறுநாள் பெங்களூருக்குத் திரும்பிய பிறகு நேரில் சந்தித்து பேசிக்கொள்ளலாம் என நினைத்து அழைக்கவில்லை.

மறுநாள் அவருடைய வீட்டுக்குச் சென்று விழாவில் கண்டும் கேட்டும் மகிழ்ந்த விவரங்களைச் சொன்னேன். நிகழ்ச்சியில் எடுத்த நிழற்படங்களை அவருக்குக் காட்டினேன். நிகழ்ச்சி நடைபெற்ற காந்தி கல்வி மையம் செயல்படும் தக்கர் பாபா வித்யாலயா வளாகத்தையும் சிற்சில கோணங்களில் படமெடுத்திருந்தேன். அவற்றையும் அவரிடம் காட்டினேன்.

படங்களையெல்லாம் பார்த்துவிட்டு கைப்பேசியைத் திருப்பியளித்தபோது, "இந்த வளாகத்துக்குள்ளதான் இதுக்கு முன்னால இராஜாஜி பேருல ஒரு நூலகம் இருந்தது" என்றார் விட்டடல்ராவ்.

"அப்படியா, நான் பார்க்கலையே? காந்தி கல்வி மையத்துக்குள்ள ஒரு சின்ன நூலகம் இருக்குது. அவ்வளவுதான். வேற எதுவும் இருந்த மாதிரி தெரியலையே" என்று ஐயத்தோடு சொன்னேன்.



"இல்லை இல்லை, இப்ப அந்த நூலகம் அங்க இல்லை" என்று அவசரமாக மறுத்தார் விட்டடல்ராவ். "பாரதிய வித்யா பவன் அதை தன் பொறுப்புல பல வருஷங்களுக்கு முன்னாலயே எடுத்துகிட்டாங்க. இராஜாஜி நூற்றாண்டு நினைவு நூலகம்ங்கற பேருல மைலாப்பூருல அந்த நூலகம் இப்பவும் இருக்குது."

நான் அதுவரை கேட்டிராத சரித்திரமாக அது இருந்தது. "ஏன் அப்படி?" என்று ஆர்வத்துடன் கேட்டேன்.

"சில சமயங்கள்ல நாம எதிர்பார்க்காத சில விஷயங்கள் இப்படித்தான் திடுதிப்புனு நடந்துடும். இதுக்கெல்லாம் நாம வெறும் சாட்சி. இன்னைக்கு இந்த விஷயத்தை உங்ககிட்ட சொல்ல, தெரிஞ்ச ஆளா நான் ஒருத்தன் இருக்கேன். அப்புறம் படிப்படியா காத்தோடு கரைஞ்சிபோயிடும். ஞாபகம் இருக்கிற வரைக்கும்தான் ஒவ்வொன்னும் சரித்திரம்."

"அந்த நூலகம் ஏன் உருவாயிச்சி? யாரு உருவாக்கினாங்க? ஏன் அந்த இடத்தைவிட்டு போச்சி? ஒன்னுமே புரியலையே சார்" என்று விட்டடல்ராவிடம் கேட்டேன்.

விட்டடல்ராவ் ஒருகணம் யோசனையில் ஆழ்ந்துவிட்டு மெதுவாகச் சொல்லத் தொடங்கினார்.

"காந்தி இந்தியாவுல ஹரிஜன சேவா சங்கம் தொடங்கியதுமே, அந்த சங்கத்தின் சார்பா எல்லா முக்கியமான இடங்கள்லயும் ஒரு தொழிற்பயிற்சி மையத்தை தொடங்கறதுக்கு ஏற்பாடு செஞ்சாரு. ஒடுக்கப்பட்ட மக்களுடைய வாழ்க்கையில முன்னேற்றம் ஏற்படணும்ன்னா, அவங்களுக்கு சில துறையில நல்ல பயிற்சியும் திறமையும் ரொம்ப அவசியம்னு அவர் நினைச்சார். அந்த நோக்கத்துக்காக ஆரம்பிச்சதுதான் தொழிற்பயிற்சி மையம். ஆரம்பத்துல அந்த மையத்த கோடம்பாக்கத்துல தொடங்கினாங்க. அப்புறமா இடம் வாங்கி கட்டட வசதியெல்லாம் வந்த



தக்கர் பாபா வித்யாலயா, சென்னை

பிறகு இந்த இடத்துக்கு மாத்திகிட்டாங்க. அப்பதான் தக்கர்பாபா பேர வச்சாங்க."

"சரி சரி."

"ஒரே சமயத்துல நூத்துக்கணக்கான பேருக்கு ஃபிட்டர் பயிற்சி, எலெக்ட்ரிசியன் பயிற்சி, தச்சுவேலைப் பயிற்சி எல்லாம் கொடுத்தாங்க. அந்தப் பிள்ளைகள் படிச்சி நாலு பொது விஷயங்களையும் கத்துக்கிடணும்மனுதான் நூலகத்துக்குன்னு ஒரு கட்டடத்தை வளாகத்துக்குள்ளயே கட்டி தொடங்கினாங்க. இருந்த கொஞ்ச நஞ்சம் புத்தகங்களை வச்சி எப்படியோ ஆரம்பிச்சிட்டாங்க. அந்த நூலகத்துக்கு எஸ்.வி.எஸ்.னு ஒருத்தர் நூலகரா வந்தார். முழுப்பெயர் எஸ்.வி.சுப்பிரமணியன்."

"அவரும் சுதந்திரப் போராட்டத்துல கலந்துகிட்டவரா?"

"ஆமாம். பெரிய காந்தியத் தொண்டர். சிறைக்கெல்லாம் போயிருக்கார். கல்கி கூட ரொம்ப காலம்இருந்தார். கதைகள் கூட எழுதியிருக்கார். நிறைய படிச்சிருக்கார். நான் அவரைப் பார்த்திருக்கேன்."

"அப்படியா?"

"அது மட்டுமில்லை. கல்கி பத்திரிகையில கொஞ்ச காலம் துணையாசிரியரா வேலை பார்த்திருக்காரு. இலக்கியச் சிந்தனை அமைப்புடைய ஆலோசனைக் குழுவுல கூட அவரும் இருந்திருக்காரு. டி.கே.சி., எம்.எஸ். சுப்புலட்சுமி மாதிரியான ஆளுமைகளோடு பழகிய அனுபவம் உள்ளவர். அசோகமித்திரன், தி.க.சி. போன்ற எழுத்தாளர்களுக்கும் நண்பரா இருந்திருக்காரு. நல்ல இலக்கிய ஈடுபாடு கொண்ட மனிதர்."

"சரி."

"தங்கமான மனிதர். ரொம்ப சுறுசுறுப்பு. யாராவது ஒரு எழுத்தாளரை அவருக்கு அறிமுகப்படுத்தி வைச்சா, அவர் என்னென்ன கதைகள் எழுதியிருக்கார், எந்தெந்த பத்திரிகைகள்ல எழுதியிருக்கார், என்னென்ன புத்தகங்கள் வந்திருக்குதுன்னு எல்லா விவரங்களையும் கேட்டுக்குவார். பிறகு அவரே எல்லாத்தையும் தேடி புடிச்சி படிப்பாரு. அடுத்த முறை அந்த எழுத்தாளரைப் பார்க்கும்போது அந்த கதைகளைப் பத்தி பேசுவார். சில சமயத்துல ஃபோன்லயே கூப்பிட்டும் கூட கதைகளைப் பற்றி தன்னுடைய கருத்துகளைச் சொல்வார்."

"இப்படியும் இந்த காலத்துல ஒரு மனுஷனான்னு ஆச்சரியமாத்தான் இருக்குது."

"நூலகத்தை இன்னும் விரிவாக்கி பெரிசாக்கணும், வந்து போகிற எல்லாருக்கும் பயன்படணும்ன்னு அவரு ரொம்ப பாடுபட்டாரு. அந்த நேரத்துல அந்த அமைப்பால நூலகத்துக்குன்னு புத்தகங்கள் வாங்கறதுக்கு செலவு செய்ய முடியலை. அதனால முடிஞ்ச அளவு தெரிஞ்ச நண்பர்கள்கிட்ட

புத்தகங்களை அன்பளிப்பா வாங்கி சேர்க்கணும்னு அவரு மனசுக்குள்ள முடிவு செஞ்சிட்டார். ஒருநாள் நான் அந்தப் பக்கமா போயிருந்தபோது என்கிட்ட அவருடையதிட்டத்தைச்சொன்னாரு.சிறுதுளிதானே பெருவெள்ளம்,நல்லதிட்டமா இருக்குது,செய்யலாம் சார்னு நான் அவரை உற்சாகப்படுத்தினேன். உங்கள மாதிரி எழுத்தாளர்கள்தான் எனக்கு உதவி செய்யணும், புத்தகங்களை கொடுத்து நீங்கதான் மத்தவங்களுக்கு முன்னுதாரணமா இருக்கணும், உங்க நட்பு வட்டத்துல இருக்கிற எழுத்தாளர்கள்கிட்டயும் இந்த விஷயத்தை எடுத்துச் சொல்லி, அவங்ககிட்டயும் அன்பளிப்பு வாங்கித் தரணும்னு சொன்னாரு. நல்ல திட்டம்னு மனசுல பட்டுது. சரின்னு நானும் உற்சாகத்துல தலையாட்டிட்டு வந்துட்டேன்."

"அப்புறம், என்ன செஞ்சீங்க?"

"வீட்டுக்கு வந்து என்கிட்ட இருந்த புத்தகங்கள்ல ஒரு ஐம்பது புத்தகங்களை ஒரு கட்டா கட்டி தூக்கி எடுத்துட்டு போய் எஸ்.வி.எஸ்.கிட்ட கொடுத்தேன். அவருக்கு ஒரே மகிழ்ச்சி. அந்த நூலகத்தை பத்தி அசோகமித்திரன், கந்தசாமி கிட்டயும் போய் சொன்னேன். அவுங்களும் ஆளுக்கு நாற்பது, ஐம்பது புத்தகங்கள் கொண்டுவந்து அவருகிட்ட கொடுத்தாங்க."

"அவர் நினைச்ச மாதிரியே நடந்துட்டுது."

"ஆமாம். அவர் உடனே ஒரு பெரிய ரெஜிஸ்டர் வாங்கி ஒரு அட்டவணை போட்டார். புத்தகத்துடைய பெயர், எழுத்தாளருடைய பெயர், நன்கொடையா கொடுத்தவங்களுடைய பெயர், தேதி எல்லாத்தயும் விவரமா எழுதி புத்தகங்களுக்கும் நெம்பர் கொடுத்து ஒரு பெரிய ரேக்குல அடுக்கி வைக்க ஆரம்பிச்சார். கொஞ்சம் கொஞ்சமா நண்பர்கள் பங்களிப்புலயே நூலகம் உருவாயிடுச்சி."

"ஆச்சரியம்தான் சார்."

"ஒரு ஆறு மாசத்துக்குள்ள ஆயிரத்துக்கும் மேல புத்தகங்கள் சேர்ந்துட்டுது. ஆனாலும் எஸ்.வி.எஸ். என்னை பார்க்கும்போதெல்லாம் இன்னும் நண்பர்கள்கிட்ட சொல்லுங்க சார்னு சொல்லிட்டே இருப்பார். அந்த நூலகத்தை பெரிய அளவுல முக்கியத்துவம் உள்ள இடமா மாத்தணும்னு அவருக்குள்ள ஒரு வேகம் இருந்தது."

"சரி."

"அதுக்கு இன்னொரு நல்ல திட்டத்தை தொடங்கினார். ஒவ்வொரு செவ்வாய்க்கிழமை யிலயும் மாலை நேரத்துல நூலக கட்டிடத்துக்குள்ள ஒரு இலக்கியக் கூட்டத்தை நடத்த ஆரம்பிச்சாரு. க.நா.சு., நா.பா., சிட்டி மாதிரியான பெரிய பெரிய எழுத்தாளர்கள்லாம் வந்து பேசினாங்க. க.நா.சு.வுக்கு சாகித்திய அகாதெமி விருது கிடைச்ச நேரத்துல, இந்த நூலகத்துலதான் அவருக்கு ஒரு பாராட்டுக் கூட்டம் நடத்தினாங்க. நிகழ்ச்சியைப் பார்க்கிறதுக்கு நிறைய வாசகர்கள் வந்தாங்க. எல்லாருமே இந்த வளாகத்துக்குள்ள இப்படி ஒரு நூலகம் இயங்கிகிட்டிருக்கிறத பார்த்து ஆச்சரியப்பட்டுட்டாங்க. பிறகு ஒவ்வொருவருமே ஆளுக்கு கொஞ்சம் புத்தகங்களை கொண்டுவந்து கொடுத்தாங்க. சில பேர் ஆங்கில புத்தகங்களையும் கொண்டுவந்து கொடுத்தாங்க."

"ம்."

"அந்த காலத்துல தாட்(THOUGHT)ங்கற பேருல ஒரு ஆங்கில பத்திரிகை வந்துட்டிருந்தது. ரொம்ப தரமான இலக்கியக் கட்டுரைகள் எல்லாம் அதுல வரும். க.நா.சு. அதுல எழுதுவாரு. அந்தப் பத்திரிகைய ஆஞ்சநேயலுன்னு ஒருத்தர் எடிட்டரா இருந்து நடத்தினாரு. அவரும் அந்த நூலகத்துக்கு அடிக்கடி வந்து போவாரு. அவர் கூட நிறைய புத்தகங்களை நூலகத்துக்கு அன்பளிப்பா கொடுத்தார். இப்படி மற்றவர்களுடைய பங்களிப்பாலயே அந்த நூலகத்தை எஸ்.வி.எஸ். கொஞ்சம் கொஞ்சமா வளர்த்து பெரிசாக்கினார்."

அதைக் கேட்கும்போது உண்மையிலேயே அது ஒரு மகத்தான செயல் என்று தோன்றியது. "இதைவிட பெரிய சேவை உலகத்துல என்ன இருக்கப்போவுது சார். எஸ்.வி.எஸ். மாதிரியான ஆளுமைகளுக்கு இந்தக் காலத்துத் தலைமுறை ரொம்ப கடமைப்பட்டிருக்குது சார்" என்றேன்.

"என் மூலமா விஷயத்தை தெரிஞ்சிகிட்ட எல்லாருமே ஏதோ ஒரு வகையில நாற்பது புத்தகம், அம்பது புத்தகம், நூறு புத்தகம்னு கொண்டு வந்து கொடுத்திட்டு போனாங்க. அந்த வகையில ஏதோ ஒரு வகையில ஒரு நல்ல செயலைச் செய்றோம்னு எனக்கும் ஒரு திருப்தியா இருந்தது."

விட்டல்ராவின் முகத்தில் ஒருகணம் வெளிச்சம் படர்ந்ததைப் பார்த்தேன். அவர் ஆற்றியிருப்பது உண்மையிலேயே பெருமைக்குரிய செயல் என்றுதான் எனக்கும் தோன்றியது.

சிறிது நேர இடைவெளிக்குப் பிறகு, "உங்களுக்கு அப்துல் ரஹீம்னு ஒருத்தர பத்தி சொல்லியிருக்கேனே, நினைவிருக்கிறதா?" என்று திடீரென கேட்டார் விட்டல்ராவ்.

"ஆமாம் சார். சொல்லியிருக்கீங்க. நியூ காலேஜ்ல வேலை செஞ்சவர். உங்களுக்கு பக்கத்துல அறையில தங்கியிருந்தவர், அவர்தானே?"

"அவரேதான். எல்லார்கிட்டயும் சொல்றமாதிரி ஒருநாள் அவர்கிட்டயும் அந்த நூலகத்தை பத்தி சொன்னேன். அதைக் கேட்டதும் அவருக்கும் ஒரு ஆர்வம் வந்துட்டுது. என்னையும் ஒருநாள் அங்க



பாரதிய வித்யா பவன், சென்னை

அழைச்சிகிட்டு போங்க, பார்க்கறேன்னு சொன்னார் ரஹீம். ஒரு செவ்வாய்க்கிழமை கூட்டத்துக்கு அவரை நானும் அழைச்சிகிட்டு போனேன். அவரும் உற்சாகமா வந்தார். நூலகத்தையெல்லாம் சுத்தி பார்த்தார்."

"புத்தகங்கள் அன்பளிப்பு கொடுத்தாரா?"

"அறைக்குத் திரும்பியதுமே ரெண்டு பெரிய அட்டைப் பெட்டிங்கள தயார் செஞ்சி அதுக்குள்ள புத்தகங்களை அடுக்க ஆரம்பிச்சார். அம்பது, இல்லை நூறு கொடுப்பார்னுதான் நான் நினைச்சேன். ஆனா, அவர் இருநூறு புத்தகங்களை எடுத்து அடுக்கி வச்சார். அதுக்கப்புறம் நாங்க ரெண்டு பேருமா ஆட்டோவுல தூக்கி வச்சி எடுத்துச் சென்று எஸ்.வி.எஸ்.கிட்ட கொடுத்திட்டு வந்தோம். எஸ்.வி.எஸ்.க்கு ரொம்ப மகிழ்ச்சி. உங்களுக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலைன்னு என் கைகளைப் புடிச்சி அழுத்தினார் எஸ்.வி.எஸ்."

எனக்கு மனம் நெகிழ்ந்துவிட்டது. "நோக்கம் நல்லதா இருந்தா, இப்படி தானாவே உதவிகள் பல பக்கங்கள்ல இருந்து கிடைக்கும் சார்" என்று பொதுவாகச் சொன்னேன்.

"ஒவ்வொரு செங்கல்லா வச்சி வீடு கட்டறது மாதிரி சிறுகச்சிறுக பாடுபட்டு அந்த நூலகத்தை உருவாக்கினார் எஸ்.வி.எஸ். துரதிருஷ்டவசமா அவருடைய மரணத்துக்குப் பிறகு எதிர்பார்த்த அளவுக்கு அந்த நூலகம் சரியா இயங்கலை. அப்படிப்பட்ட சூழல்தான் எஸ்.வி.எஸ்.சுடைய அர்ப்பணிப்பு எந்த அளவுக்கு மகத்தானதுன்னு இந்த உலகத்துக்கு உணர்த்தற மாதிரி இருந்தது."

அதைக் கேட்டதும் அதிர்ச்சியடைந்தேன். "அப்படியா?" என்று நம்ப முடியாமல் கேட்டேன். விட்டல்ராவ் உதட்டைப் பிதுக்கியபடி தலையசைத்தார்.

"பல மாசங்கள் ஓடிட்டுது. எஸ்.வி.எஸ்.க்குப் பிறகு வேற யாருமே நூலகரா அங்க வரலை. அந்த நேரம் பார்த்து மைலாப்பூர்ல பாரதிய வித்யா பவன் இராஜாஜி பேருல ஒரு நூலகம் அமைக்கணும்னு நெனச்சிட்டிருந்தாங்க. அமைப்புகளுக்கு நடுவுல எந்த மாதிரியான பேச்சு நடந்ததோ தெரியலை. ஒருநாள் திடீர்னு தக்கர் பாபா வளாகத்துல எஸ்.வி.எஸ். நூலகம் பாரதிய வித்யா பவனுக்குள்ள போயிடுச்சி. அன்னைக்கு இருந்ததைவிட ரெண்டு மூனு மடங்கு பெரிசா, இன்னைக்கும் அந்த நூலகம் அங்க இருக்குது."

அதைச் சொல்லிவிட்டு விட்டல்ராவ் ஒருமுறை பெருமூச்சு விட்டார். பிறகு "நான் அந்த நூலகத்தைப் பார்க்கிற போதெல்லாம், ராஜாஜியுடைய முகத்தைவிட எஸ்.வி.எஸ். முகத்தைத்தான் நினைச்சிக்குவேன். அந்த அளவுக்கு உற்சாகமும் சுறுசுறுப்பும் கொண்டவர் அவர். முதுமை அவரை தொட்டுக்கூட பார்க்கலை. எண்பது வயசைக் கடந்த பிறகும் இளமையாவே இருந்தார்" என்று சொல்லிவிட்டுச் சிரித்தார்.


பாவண்ணன்

<writerpaavannan2015@gmail.com>

# ரேகா கவிதைகள்

ஓவியம்: ஞானப்பிரகாசம் ஸ்தபதி



## 1. முழுதுமாக மாறியிருக்கிறது

பழைய புகைப்பட
ஆல்பத்தை திறந்து
வாசித்துக் கொண்டிருந்தேன்.
கரையான்கள் மனிதர்களை
ஒழுங்கென்று ஏதும் இல்லாமல்
மொத்தமாய் திருப்பித் திருப்பி
பிடிவாதமாகவே வாசித்திருந்தது.
கால எந்திரத்திலேறி
பின்னோக்கி..
தந்தையின் வாசனை
நல்ல பசி.
மேல்மலையனூர் அங்காளம்மன்
கோயில் வாசலில்
தந்தை என்னை தோள்கள் மீது
அமர வைத்திருப்பதை பார்த்து
ஒரு கணம் உடைந்து அழுது



வாழ்வினை உன்னிப்பாக
உற்று நோக்கி..
மாபெரும் உழைப்பில் எங்களை
வளர்த்தெடுத்தவர்
தடுமாறிய போதெல்லாம்
தாங்கி பிடித்த
அந்த விரல்களையும்
பாதங்களையும்
தொட்டுப் பார்த்துக்கொண்டேன்
பழைய புகைப்பட ஆல்பத்தில்
கரையான்கள் வசிக்காத இடத்தை.

## 2. வழக்கத்துக்கு மாறாக

புகைமூட்டம்
ஏற்கனவே பறவைகளின்
ஞாபகம் இல்லாமல் போய்விட்டது
போராட்டக் களத்தில் இருப்பது
போன்று தீவிரமான சத்தத்தை
எழுப்பிக் கொண்டிருந்தது
இயற்கையின் அழகு
திணறடித்துக் கொண்டிருந்தன
அதிகாலைப் பொழுதில்
ஆரஞ்சும் மஞ்சளும்
கலந்த ஒளி
காட்டுக்குள்ளே அழைத்து சென்றது
அதே போராட்டங்கள் நிறைந்த
சத்தத்தை எழுப்பிக் கொண்டிருந்தது
விளங்கவே இல்லை
நீண்ட வளைந்த வெள்ளை
கொம்பினை மண்ணில்
குத்தி வாரி இறைத்து
அலறிக் கொண்டிருந்தது
காவலர்களாக சூழ்ந்து
கொண்டிருந்த புகை மூட்டத்தை
சற்று விலக்கி பார்த்தபோது
கருமேகங்கள் ஒன்றோடு
ஒன்று மோதி
இடி மின்னல் உருவாக்கி
கனமழை பொழிதலைப் போன்று
அனைத்து கலை படைப்புகளும்
அதே சமயத்தில் நிகழ்கிறது

## 3. அமாவாசை அன்று

படையல் முடிந்ததும்
காகத்திற்கு சாதம்
வைத்து விட்டு வரும் வரை
தம்பியை
பத்திரமாக பார்த்துக்கொள்
என்றாள் தன் மகளிடம்

குழந்தை
பசி பொறுக்காமல்
அழுதுகொண்டே
அருகில் இருக்கும்
சாம்பல் கரிகளை எடுத்து
உண்ண ஆரம்பித்தது

குழந்தை சாம்பல் கரியை
உண்பதை கண்டு எரிச்சல்
தன் கையில் வைத்திருந்த
சூடான தோசை கரண்டியை
குழந்தையின் இடது தொடையில்
வைத்து விடுகின்றாள்

குழந்தைக்கு இடது தொடையில்
வைக்கப்பட்ட சூடு
என்றும் தாமரை வடிவமாக

## 4. சிற்பமோன்று

மிகவும் பிடித்திருந்தது
அதுபோலவே
குதிரையின்
கண்கள் போன்று
சுழன்று கொண்டே இருந்தது
எங்கு சென்று பார்த்தாலும்
தன்னை நோக்குவதாகவே
அவர்கள் உணர்ந்தார்கள்
ஆனால், அவள்
அகம் நோக்கி
தன் குதிரையை
செலுத்திக் கொண்டிருந்தாள்



## 5. தொலைதூரத்தில்

படகு ஒன்று வருகிறது
என்றான் நண்பன்
புருவம் சுழித்து பார்த்தபோது
படகினை பாம்புகள் சூழ
வளைந்த நெளிந்து
அடுத்தடுத்து பல்வேறு பரிணாமங்களில்
ஒளிக்கதிர்களை வீசிக்கொண்டு
நம்மை நோக்கி வருகிறது
என்று கூறினேன்

## 6. பாறைகளில் காகங்கள்

கீறிய இடத்தை
தன் நண்பனுடன் வந்திருக்கும்
கிழவன் அதை நான் கீறியதாக சொல்கிறான்
கிழவன் இது யானை இது குதிரை
இது கழுதை என்கின்றான்
காகத்தை தவிர மற்ற விலங்குகள்
பறவைகள் அனைத்தும்
வரையப்பட்டுள்ளது
ஒவ்வொரு மலையிலும்
அத்தனை யானைகள்
தியானத்தின் அமைதியில்
உருமாறிக் கொண்டிருக்கும்

ரேகா
<gnanaprakasamsthabathy@gmail.com>


World class service for Design & Construction of Precast Buildings
We thank all our customers for their trust & confidence endowed upon us. Its our mission to continually strive to provide cost-effective & high quality PRECAST products
European Technology
Modern Construction
TEEMAGE
PRECAST
4 PRECAST FACTORIES
15 CRANES + 2 tower cranes
50 LAKHS SQ.FT CONSTRUCTED
Class 1A contractor of CPWD, SPL class contractor in R&B Andhra, executed precast construction for CRPF, NBCC, NPCIL, DMRC, ISRO
150 PROJECTS COMPLETED
350 ENGINEERS
2000 EMPLOYEES
School in Coimbatore 25,300 Sq.ft completed within 60 days
Commercial Mall 2,25,000 Sq.ft completed in 120days
Hostel Building 26,000 Sq.ft completed in 70 days
Housing for CRPF 72 Days 1 Block 251 Houses 11 Months
EASIER
FASTER
BETTER
SERVICES OFFERED
•Design & Detailing
•Planning
•Production
•Transportation
•Erection
TYPES OF BUILDING
•Commercial
•Industrial
•Institutional
•Residential
•Multi level-Car Parking
TEEMAGE
Corporate Office :
6/35, College Road, 1st Cross Street, Tiruppur - 641 602.Tamilnadu. India. Ph : 0421 2240488.
82204 55555, 82200 51777
email : sales@teemageprecast.in
marketingteemage@gmail.com
web : www.teemageprecast.in
4 Precast Factories Pan India
Coimbatore | Delhi | Hyderabad | Chennai

# பனிபடர்ந்த மலையிலிருந்து வரும் படைப்பு

## சரவணன் மாணிக்கவாசகம்

பழைய துர்தேவதைகளும் புதிய கடவுளரும் - தொகுப்பு: தென்சின் டிகி; தமிழில்: கயல்; விலை ரூ. 450; எதிர் வெளியீடு, 96 நியூ ஸ்கீம் ரோடு, பொள்ளாச்சி 642002; தொலைபேசி: +919895005084; மின்னஞ்சல்: ethirveliyedu@gmail.com



கயல்

தென்சின் டிகி - எழுத்தாளர், மொழிபெயர்ப்பாளர். ஹார்வர்டில் ஆங்கில இலக்கியமும் கொலம்பியாவில் நுண்கலையும் கற்றவர். திபெத்தியரான இவர் நவீன திபெத்திய இலக்கியத்தை உலகிற்கு அறிமுகப்படுத்தும் முயற்சியே இந்தத் தொகுப்பு.

திபெத் பல காலமாகவே சீனாவின் அத்துமீறலுக்கு ஆளாகி வந்திருக்கிறது. முன்னுரையில் தென்சின் குறிப்பிட்டிருப்பதைப் போல திபெத்திய அடையாளங்கள், கலாச்சாரத்தை அழித்து சீன அடையாளத்தைத் திணிக்கும் முயற்சிகள் நடந்திருக்கின்றன. இன்றும் கூட திபெத், சுதந்திர நாடாக இல்லாமல் சீனாவின் சுதந்திரப் பகுதியாகவே இருந்து வருகிறது. 1970க்குப் பிறகே திபெத்தில் நவீன இலக்கியம் வேறூன்ற ஆரம்பித்திருக்கிறது. அதை மனதில் வைத்தே நாம் இந்தத் தொகுப்பை அணுக வேண்டும்.

‘வேட்டையாடியின் நிலவு’ கதையைப் படிப்பவர்கள், அசோகமித்திரனின் பிரயாணம் கதையை இணையத்தில் தேடிப் படித்துப் பாருங்கள். அசோகமித்திரன் எழுத்தாளர்களின் எழுத்தாளர்; இருந்த போதும் சுய அனுபவம் என்பது கதைகளில் கலக்கும் பொழுது அதன் வீச்சு வேறாகத்தான் இருக்கிறது.

‘அன்பளிப்பு’ கதையும் தொகுப்பின் சிறந்த கதைகளில் ஒன்று. வாசக இடைவெளியைக் கொடுத்து எழுதப்பட்ட கதை. ஒருவகையில் பார்த்தால் ஆணுக்கொருவரையறையும் பெண்ணுக்கு ஒன்றும் எல்லா சமூகங்களிலுமே விதிக்கப்பட்டதாகிறது. இன்னொரு வகையில் அப்பாவிக் கணவன் மேல் பரிதாபம் எழுகின்றது. சொல்லப்பட்ட முறையிலும் சிறந்த கதை இது.

‘ஐந்தாவது நபர்’ ஆவிகளின் கதை. யார் அதிகம் மிரள்கிறார்களோ அவர்களுக்கு மட்டும் பேய் தெரியும். அறிவியல் பூர்வமாக அதை பயபீதியின் விளைவு என்றும் சொல்லலாம். ஆனால், முன்கதைச் சுருக்கம் தெரியாதவன் அருகே மூக்குடைந்த பேய் வந்து படுத்தால் என்ன காரணம் சொல்வது.

தொகுப்பாசிரியர் எழுதிய ‘டோல்மா’, தொகுப்பின் சிறந்த கதைகளில் ஒன்று. பள்ளிப்பருவத்தில் நாம் கொள்ளும் உறவுகள் காலப்போக்கில் எப்படி மாறுகின்றன என்பதோடு அல்லாமல், தகவல் தொழில்நுட்பம் எப்படி முறையில்லா உறவுகளுக்கு வழிவகுக்கிறது என்பதும் கதையில் கலக்கிறது. “டோல்மா சந்திப்போமா” என்று இவன் கேட்கும் பொழுது பதில் சொல்லாததிலும் பின் அவள் கூப்பிடும்போது இவன் விலகுவதிலும் ஒரு நுட்பமிருக்கிறது. டோல்மா வித்தியாசமானவள்.



இருபத்தி இரண்டு கதைகள் கொண்ட தொகுப்பு. தொகுப்பின் பல கதைகளில் இந்திய தேசத்துடனான நெருக்கமும் சீன வெறுப்பும் வெளிப்படையாகத் தெரிகின்றன. அமெரிக்கா சென்றாலும் திபெத்தின் மலைப்பகுதியைத் தங்களுடனே எடுத்துச் செல்லும் மக்கள். திபெத்திய புத்தமதம் இவர்களது கலாச்சாரத்தை, வாழ்க்கை முறைகளைத் தீர்மானிக்கிறது. சீனாவின் அதிகார பலத்தால் புலம்பெயர்ந்தவர்கள் திபெத்தின் மீதான காதலை வெளிப்படுத்தி இருக்கிறார்கள்.

சில கதைகள் தவிர்த்து மற்றவை சாதாரணமான கதைகள். ஆனால், திபெத்தின் வாழ்வை, கலாச்சாரத்தை, நம்பிக்கைகளை, வலிகளை தமிழில் முதன்முறையாக அறிந்துகொள்ளும் வாய்ப்பை இந்தத் தொகுப்பு வழங்கி இருக்கிறது. ஆங்கிலத்தில் கூட திபெத்திய இலக்கியம் எங்கும் பேசப்பட்டதாகத் தெரியவில்லை.

சமீபகாலங்களில் திபெத்தில் இருந்து திரில்லர் நாவல்களும் வர ஆரம்பித்திருக்கின்றன. ஜப்பானியத் திரில்லர்களில் ஜப்பானியர் வாழ்க்கை கலந்திருப்பது போல் இவற்றில் திபெத்தின் வாழ்வியல் சேர்ந்திருக்கிறது. சீனாவின் அடக்கும் கரங்கள் அடிக்கடி திபெத்திய எழுத்தாளர்களை நெருக்கியிருக்கின்றன. ஆங்கிலத்தில் அதிக நூல்கள் திபெத்திய மொழியிலிருந்து மொழிமாற்றம் செய்யப்பட்டால் உலக வாசகர்களின் கவனம் திபெத்திய இலக்கியத்தின் மீதும் பரவக்கூடும்.

கயலின் மொழிபெயர்ப்பு நன்றாக மெருகேறி யிருக்கிறது. அங்கங்கே சில வார்த்தைகளுக்கு மாற்று வார்த்தைகள் போடலாமோ என்ற சிந்தனை வந்து போனது. எப்படியாயினும் சரளமான மொழிபெயர்ப்பு, தடங்கலின்றி தமிழில் படிக்க ஏதுவாக. அதிகம் பேசப்படாத திபெத்திய இலக்கியத்திற்கு வெளிச்சம் பாய்ச்சிய படைப்பு இது. ஐந்து கவிதைத் தொகுப்புகளை வெளியிட்டுவிட்டுப் புதிதாகமொழிபெயர்ப்புக்கு வந்து, குறுகிய காலத்தில் குறிப்பிடத்தக்க அளவில் செய்துள்ளார் கயல்.


சரவணன் மாணிக்க வாசகம்
<sarakavivar@gmail.com>

# கால்ல விழாதிங்க தலைவா

கஜன்



ரஜினி வீட்டின்
முன்னாள் சென்ற
நாயொன்று
தலைவா வெளியே வா
எனக் குரைத்தது

சத்தத்தைக் கேட்டு வெளியே
வந்த ரஜினியிடம்

வயதில் சின்னவர்கள் யோகியாக இருந்தால்
அவர்களின் காலில் விழுவது உங்கள் பழக்கம் என
தான் பத்திரிகையில் படித்ததாகவும்

தான் உங்களை விட வயதில் சிறிய நாய் எனவும்
தற்போது தான் யோகி ஆகிவிட்டதாகவும்
தனது காலில் விழுந்து
ஆசிர்வாதம் வாங்கும்படியும் கேட்டுக் கொண்டது

எந்தப் பத்திரிகை என ரஜினி கேட்க
புத்திசாலிகள் மட்டும் படிக்கும் பத்திரிகையான
துக்ளக் என்றது நாய்

துக்ளக்கின் மானத்தைக் காப்பாற்ற முடிவு செய்த
ரஜினி வேறு வழியில்லாமல்
நாயின் கால்களில்
விழத் தயாரானார்

கண்ட கண்ட நாயிண்ட கால்களில்
எல்லாம் விழாதிங்க தலைவா எனக்கூறி
கண்ணடித்துவிட்டுச் சென்றது நாய்

கஜன் <gajan2050@yahoo.com>

# இமையம் கதைகளோடு ஒரு மாலைப் பொழுது

**கதிரவன் அண்ணாமலை**

எழுத்தாளர் இமையத்தின் நான்கு சிறுகதைகள் ப்ரஸன்னா ராமஸ்வாமியின் இயக்கத்தில் நாடகங்களாக சென்னை, ஆழ்வார்பேட்டையில் உள்ள 'மேடை' அரங்கில் நிகழ்த்தப்பட்டன. சென்னை ஆர்ட் தியேட்டர் வழங்கிய இந்நிகழ்வு 'இமையம் கதைகளோடு ஒரு மாலைப் பொழுது' எனத் தலைப்பிடப்பட்டு, எழுத்தாளர்கள், நாடகக் கலைஞர்கள், திரைப்பட இயக்குநர்கள் என பலரின் முன்னணியில் நடைபெற்றது. நிக்கிலா கேசவன், ஜானகி சுரேஷ், கீதா கைலாசம், பிரசன்னா ராம்குமார், ஸ்மிர்தி பரமேஷ்வர், நந்தக்குமார், பிரேம், சிநேகா, கீதாஞ்சலி, அபர்ணா ஆகியோர் நடித்திருந்தனர். அரங்கின் ஒளியமைப்பை ரிஷி செய்திருந்தார்.

ப்ரஸன்னா ராமஸ்வாமி தமிழ் இலக்கியத்தின் முன்னணி எழுத்தாளர்களின் கதைகளை 'கதைகள் பேசுவோம்' என்கிற தலைப்பில் மேடையேற்றி வருகிறார். தி. ஜானகிராமன், அசோகமித்திரன் ஆகியோரின் கதைகளைத் தொடர்ந்து, தற்போது இமையத்தின் எழுத்துக்களையும் நாடக மேடைக்கு கொண்டு சேர்த்திருக்கிறார்.

விளிம்பு நிலை மனிதர்களையும் அவர்களின் அன்றாட அவதிகளையும் கதைகளாக்கும் இமையத்தின் எழுத்துக்கள் சமூகத்தின் கொடூர முகங்களை கேள்விக்குட்படுத்துபவை. அதிலும், பெண்களை மையப்படுத்தும் அவரது பெரும்பாலான சிறுகதைகள் ஆண் வயப்பட்ட சமூகத்தையும் அதற்கு வலு சேர்க்கும் அதிகார வர்க்கத்தையும் தோலுறிக்கும் தன்மை கொண்டவை. அப்படியான நான்கு சிறுகதைகளான 'காதில் விழுந்த கதைகள்', 'அணையும் நெருப்பு', 'மயானத்தில் பயமில்லை', 'தாலி மேல சத்தியம்' ஆகியவற்றை ப்ரஸன்னா நேர்த்தியான முறையில் மேடையேற்றியுள்ளார்.



'அணையும் நெருப்பு', 'மயானத்தில் பயமில்லை' ஆகிய கதைகளில் இடம்பெறும் பெண்கள் சமூகத்திலிருந்து விடுபட்டவர்களாகவும் அதன் மைய நீரோட்டத்திலிருந்து துரத்திவிடப்பட்டவர்களாகவும் இருக்கின்றனர். முதல் கதையில் வரும் சந்தோசம் ஒரு விதவை. திருமணமாகி சில ஆண்டுகளிலேயே கணவனை இழந்து, சமூகத்தின் சந்தேகத்தால் துரத்தப்பட்டு, தெரியாததொரு ஊரில் மறைவான வாழ்க்கை வாழ்கிறாள். அங்கு அவளை பாலியல் இச்சையுடன் அணுகும் இளைஞன் ஒருவனுக்கு அவள் தன் கதையை விவரிப்பதே 'அணையும் நெருப்பு'.

'மயானத்தில் பயமில்லை' கதையில் சமூகத்தின் விளிம்பில் வாழ்ந்து கொண்டிருக்கும் இரு பெண்கள் ஒருவருக்கொருவர் தங்களின் வாழ்க்கை கதைகளைப் பரிமாறிக்கொள்கின்றனர். தாய், தந்தையை இழந்த சீதாவிற்கு பிணக்குழி வெட்டுபவர் அடைக்கலம் கொடுக்கிறார். காலப்போக்கில் மயானம் அவள் வீடாகிறது, வாழ்வாகிறது, பிணக்குழி வெட்டும் வேலை அவளுக்கு சோறு போடுகிறது. அங்கு சித்தாள் வேலை பார்க்க வரும் நாகமணிக்கு தன் கதையை சொல்லி, அவள் கதையையும் தெரிந்துகொள்கிறாள். இரு கதைகளில் வரும் பெண்களுக்கும் தேவைப்படுவது கேட்பதற்கென்று ஒரு ஆள். தங்கள் கதைகளை சொல்லி அழுவதற்கு ஒரு மடி.

இமையம் சொல்வதுபோல் அவரது கதைகளின் பெண்களுக்கு கற்பு, நெறி என்று ஒன்றும் இல்லை. புனிதம் என்று ஒன்றும் இல்லை. தங்களின் பெண்மையின் புனிதத்தை யாரிடமும் நிரூபிக்க வேண்டிய





அவசியமும் அவர்களுக்கு இல்லை.

'காதில் விழுந்த கதைகள்' பெயரற்ற மனிதர்களின் கதைகளை அலைபேசியின் மூலம் இணைக்கிறது. ஊர்க்காரர்களுக்கு பயந்தபடியே தன் காதலனிடம் பேசும் இளம்பெண், மகளிடம் தன் கணவனை திட்டித் தீர்க்கும் தள்ளு வண்டியில் வாழைப்பழம் விற்கும் பெண், கருத்தரிப்பிற்காக +2 படிக்கும் மாணவியிடம் ஆலோசனை கூறும் செவிலியர் என பலதரப்பட்ட மனிதர்களின் கதையை பேசுகிறது இக்கதை.

முதல் மூன்று கதைகளிலுமிருந்து வேறுபட்டது 'தாலி மேல சத்தியம்.' பஞ்சாயத்து தேர்தலில் தோல்வியுற்ற ராஜன் தனக்கு வாக்களிக்காதவர்களின் வீடுகளுக்கு சென்று தான் கொடுத்த பணத்தை வசூல் செய்வது பற்றியது. உள்ளாட்சி தேர்தல்களில் சாதியை மையப்படுத்தி செய்யப்படும் அரசியலை வெளிச்சம் போட்டு காட்டுகிறது இக்கதை. நம்முடைய தேர்தல் முறையையும் ஜனநாயகத்தையும் கேள்விக்குட்ப்படுத்துகிறது.

பொதுவாக ஒரு பிரதி நாடகமாக நிகழ்த்தப்படும்போது அது பல்வேறு மாற்றங்களுக்கு உள்ளாகிறது. ஒளி அமைப்பு, இசை கோர்ப்பு, நடிகர்களின் வசன உச்சரிப்பு, அவர்களின் உடல் மொழி, பார்வையாளர்களின் ஈடுபாடு, அரங்க அமைப்பு எனப் பல்வேறு அம்சங்கள் பிரதியின் அர்த்த தளங்களை விரிவுப்படுத்தி அதனை பன்முகத்தன்மை கொண்டதாய் மாற்றுகிறது. அப்படியான மாற்றங்களைப் பெற்று இமையத்தின் கதைகள் நாடக வடிவில் புதியதொரு கலைப்படைப்பாக பார்வையாளர்களை சென்றடைந்திருக்கின்றன. இதற்கு முக்கிய காரணிகளாக இயக்குநரின் நேர்த்தியான மேடையாக்கமும் நடிகர்களின் இயல்பான நடிப்பும் செயல்பட்டிருக்கின்றன.

கதிரவன் அண்ணாமலை

<itsmekathir3@gmail.com>

# யார் எதிரி, யார் சிநேகிதன்?

## இந்திரா பார்த்தசாரதி

பெரிய பங்களா. முன்புறம் மரம், செடி கொடி வகைகள். பச்சைக் கம்பளம் விரித்தாற்போல் 'லான்ஸ்'.

'கேட்'டைத் தள்ளிக்கொண்டு உள்ளே போகவண்டும்.

இந்த மாதிரி வீடுகளில் நாய் இருப்பது சகஜம். ஆனால், 'நாய் ஜாக்கிரதை' என்ற எச்சரிக்கை அறிவிப்பு எதுவும் இல்லை.

அவன் 'கேட்'டைத் தள்ளிக்கொண்டு போய், சிறிது நேரம் தயங்கி நின்றான்.

உள்புறத்திலிருந்து யாராவது வரக் கூடுமென்ற நம்பிக்கை. வீடு நிசப்தமாக இருந்தது.

அவன் கைக் கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஏழரை. இந்த நேரத்தில்தான் அவரைப் பார்க்க முடியும் என்று சொன்னார்கள். மிகவும் 'பிஸி'யான மனிதர் என்றும் கூறினார்கள். வியாபாரம், அரசியல், சமூகப் பணி என்று எவ்வளவோ வேலைகள்!!

தொலைபேசி மூலம் 'அப்பாய்ன்மெண்ட்' கேட்க எத்தனையோ தடவை முயன்றான். அவர் கிடைக்கவில்லை. அதனால்தான் அவரை எப்படியோ பார்த்துவிடுவது என்ற துணிவுடன் வந்திருக்கிறான்.

அவரைப் பார்ப்பதற்கு ஒரு பெரிய கூட்டம் காத்திருக்கும் என்று எதிர்பார்த்தான். யாரும் இல்லை என்பது அவனுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

ஒருவேளை, தப்பான வீட்டுக்கு வந்துவிட்டோமோ என்று சட்டைப் பையிலிருந்து ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்துப் பார்த்தான். சரியான வீடுதான். வாசலில் அவருடைய பெயர்ப் பலகையைப் பார்த்தது நினைவுக்கு வந்தது.

அவர் வீட்டு வாசலில் போய் நின்றான். அழைப்பு மணி எங்கு இருக்கிறது என்று சுற்று முற்றும் பார்த்தான்.

அவனைப் பின்தொடர்ந்து யாரோ வந்திருப்பதை உணர்ந்தான். திரும்பிப் பார்த்தான்.



அவன் இதயத் துடிப்பு அவன் காதில் ஒலித்தது. ஆள் உயரத்துக்கு ஒரு பெரிய 'அல்சேஷன்' நாய், குரைக்காமல், அவனைப் பார்த்துக்கொண்டு நின்றது. அவனை அச்சுறுத்துவதற்கு அதன் பார்வையே போதுமென்று அது நினைத்திருக்க வேண்டும். குரைத்து, குரல் விரயம் செய்ய அது விரும்பவில்லை என்று அவனுக்குத் தோன்றிற்று.

"சார்" அவன் குரலைச் சற்று எழுப்பிக் கூப்பிட்டான், சற்றுத் துணிவுடன்,

அல்சேஷன் குரைக்கவில்லை! இந்த அப்பாவிப் ஜந்துவால் தன் யஜமானனுக்கு எந்த ஆபத்தும் இல்லை என்று அது நினைத்திருக்க வேண்டும்.

அவனை இன்னும் அவமானப்படுத்துவது போல், அது அவன் குரலைப் பொருட்படுத்தவில்லை என்பதோடு மட்டுமல்லாமல், தலையைத் திருப்பி வீதியை நோக்கியது.

அவனுக்கு அதிகபட்சம் தெரிந்த ஓர் ஆங்கில கெட்ட வார்த்தையைக்கொண்டு அதைத் திட்டலாம் என்று அவனுக்குத் தோன்றிற்று.

திடீரென்று அது வாலை ஆட்டிக்கொண்டு அவனைத் தாண்டிக் கதவருகே போய் நின்றது.

கதவு திறந்தது. நாய் வரவேற்றது, கட்டைக் குட்டையான கழுத்தில் தங்கச் சங்கிலி தரித்த ஓர் உருவத்தை. இரத்தச் சிகப்பேறிய கண்கள். அடர்த்தியான மீசை. சிங்கப்பூர் லுங்கி. திறந்த மார்பு.

நாய் இப்பொழுது அவனைப் பார்த்துக் குரைத்தது.

"யார் நீ?"

நாயின் குரைப்பு இரைச்சலில், அவர் இந்தக் கேள்வியைக் கேட்டாரா அல்லது நாயின் குரைப்புதான் இந்தக் கேள்வியாய் ஒலித்தது போல் அவனுக்குக் கேட்டதா என்று அவனுக்குத் தெளிவாக விளங்கவில்லை.

"ஐயாவைப் பாக்கணும்" என்றான் அவன்.

"வேலை ஒண்ணும் காலியில்லே."

"வேலைக்கு இல்லீங்க, வேற விஷயம்..."

"என்ன விஷயம்?"

"உள்ளே போய் பேசலாங்களா?"

அவர், அவனை ஏறிட்டு நோக்கினார்.

அவன் நாயைப் பரிதாபமாகப் பார்த்தான். அது குரைத்துக் கொண்டிருந்தது.

"பாண்டியா... வாயை மூடு" என்று அவர் நாயை அதட்டினார்.

ஒரு காலத்தில் செங்கோலோச்சிய பாண்டிய மன்னர்களுக்கு இந்தக் கதி வர வேண்டுமா என்று அவனுக்குத் தோன்றிற்று.

அவர் அரியணை போல் தோன்றிய ஓர் ஆடும் நாற்காலியில் உட்கார்ந்தார்.

பாண்டிய மன்னர் அவர் காலடியில் படுத்துக்கொண்டார்.

"என்ன வேணும்?"

அவன் அந்த பெரிய 'ஹாலை'ச் சுற்று முற்றும் பார்த்தான்.

'சொல்ல வந்த செய்தியை ஐந்து நிமிடத்தில் சொல்லி விட்டுப் போ, காலம் பொன்னானது', போன்ற வாசகங்கள் பொறித்த காகித அறிக்கைகள். பெரியார் படம் நடு நாயகமாகப் பெரிய அளவில் இருந்தது.

"என்ன வேணும்?" மூன்றாவது தடவையாக அவர் கேட்டார்.

"உட்காரலாமா?"

"சரி, உட்காரு... உன் பேரென்ன?"

"ராஜு."

"அதென்ன ராஜு, மொட்டையா? ராஜகோபாலனா ராஜரத்தினமா?"

"ராஜுதான் சார், என்பேரு... நாங்க, சில படிச்ச, இளைஞர்களா சேர்ந்து, கருப்பஞ்சாவடியிலே ஒடுக்கப்பட்ட இனத்தைச் சேர்ந்த கல்வி அறிவில்லாத பெரியவர்களுக்குப் ராத்திரிப் பள்ளிக்கூடம் ஒண்ணு ஆரம்பிச்சிருக்கோம்..." என்று அவன் சொல்லி முடிப்பதற்குள் அவர் சிரித்தார்.

"ஏன் சிரிக்கறீங்க?"

""அது என்னப்பா, ஒடுக்கப்பட்ட இனத்தைச் சேர்ந்த பெரியவங்க? மரியாதை எல்லாம் பலமாயிருக்கு! யார் உங்களுக்குப் பணம் தராங்க?"

"யார் தருவாங்கன்னு யோசிச்சிகிட்டிருந்தா, ஒரு நல்ல காரியமும் செய்ய முடியாது. என்கிட்டே கொஞ்சம் பணம் இருக்கு, தொடங்கிட்டேன்."

"என்கிட்டே பணம் கேக்க வந்திருக்கியா?"

"இல்லீங்க, நீங்க துவக்கி வைக்கணும். ராசியான கைன்னு உங்க பெயரைச் சொன்னாங்க. அதுக்காகச் சொல்றேன்."

அவன் சொல்வதை ஆமோதிப்பது போல் அவர் புன்னகை புரிந்தார்.

"நீ என்ன படிச்சிருக்கே?"

"ஏதோ கொஞ்சம் படிச்சிருக்கேன்."

"கொஞ்சம்னா?"

"எம்.ஏ., அது முக்கியமில்லே. நம் நாட்டிலே கல்வி அறிவு இல்லாமையை ஒழிக்கணுங்கிறது என் ஆசை... என் மாதிரி இன்னும் நாலைஞ்சு பேரா சேர்ந்து இந்தப் பணியை ஆரம்பிச்சிருக்கோம்... நீங்க எங்களுக்கு ஆதரவு தரணும்."

அவர் சிறிது நேரம் பேசாமலிருந்தார்.

"நீங்க பெரிய சீர்திருத்தவாதி, பெரியார் பக்தன்னு எல்லாரும் சொன்னாங்க. நாங்க செய்யறது உங்களுக்குப் பிடிச்சிருந்தா, நீங்க வந்து ஆரம்பிச்சு வைக்கணும்" என்றான் ராஜு.

"என்னைச் சாதாரணமா பாக்க வர்றவங்க, பணம் பிடுங்கத்தான் வருவாங்க. ஆஸ்பத்ரி கட்டப் போறோம், பணம் கொடுங்க; கோயில் தேர் திருவிழாவுக்கு நன்கொடை கொடுங்க, வாத்தியாங்க மாநாடு நடத்தப்போறோம், பகுத்தறிவு கருத்தரங்கு அது இதுன்னு. நேத்துதான் பிராம்மண எதிர்ப்பு மாநாடுன்னு நாலு பேர் வந்தாங்க. வியாபாரத்திலியும் அரசியல்லேயும் இருக்கிறதினாலே எல்லாத்துக்கும் கொடுக்க வேண்டியிருக்குது... நீ என்ன பிராமணப் பிள்ளயா?" என்றார் அவர்.

"இல்லீங்க."

"அப்பொ?"

"எனக்குச்சாதிகீதியிலேல்லாம்நம்பிக்கைஇல்லே... நாம எல்லாரும் மனுஷ சாதி, அவ்வளவுதான்."

"காப்பி குடிக்கறயா?"

திடீரென்று அவர் பேச்சின் திசையை மாற்றியது அவனுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

"வேணாங்க. நான் காப்பி குடிக்கறதில்லே."

"உன் பேர் என்ன சொன்னே? ஹாங்... ராஜு. அப்பா பேரு? நீ எந்த ஊரு?"

"விருது நகர். படிச்சதெல்லாம் மதுரையிலே. அப்பா என் சின்ன வயசிலேயே போயிட்டாரு."

"நாயுடு பையன் மாதிரி தெரியுது, பரவாயில்லே. நீ சொல்ல வேணாம். நானும் நாயுடுதான். அது தெரியுமில்லே? படிச்ச பையன், வேலைக்குப் போகாமெ, இதென்ன ஒடுக்கப்பட்ட இனத்தைச் சேர்ந்த பெரியவங்களுக்கு ராப் பள்ளிக்கூடம் அது இதுன்னுட்டு? இதெல்லாம் நடக்கிற காரியமா? கல்யாணம் ஆயிடிச்சா?"

"இல்லீங்க."

"அதான்" என்று பெரிதாகச் சிரித்தார்.

நாய் தலையைத் தூக்கி நிமிர்ந்து அவரைப் பார்த்துவிட்டு, அவனைப் பார்த்துக் குரைத்தது.

"சும்மா இருடாலே!" என்று நாயை அடக்கிவிட்டு, "நீ என்ன கட்சி?" என்றார் பக்கத்திலிருந்த துவாலை யினால் முகத்தைத் துடைத்துக்கொண்டே.

"நான் ஒரு கட்சியுமில்லீங்க."

"நீ இதெ பத்தியெல்லாம் யோசிக்கிறதில்லையா?"

"இல்லீங்க.. கட்சி அரசியல்தான் நம் நாட்டைக்

குட்டிசுவரா ஆக்கிடிச்சிங்கிறது என் அபிப்பிராயம்... ஜனநாயகத் தேர்தல்ங்கிறதெல்லாம், சாதியை நிரந்தரமாக்கத்தான்...” என்றான் ராஜு...

“நீ இப்பொ இங்கே நடக்கப் போற பிராமண எதிர்ப்பு மாநாட்டைப் பத்தி என்ன நினைக்கிறே?”

அவன் பேசாமலிருந்தான்.

“ஏதாவது சொல்லேன். உன்னைக் கடிச்சு முழுங்கிடவா போறேன்?” என்றார் அவர் சிரித்துக்கொண்டே.

“இது யாரு பிராமணர்ங்கங்கிறதைப் பொறுத்த விஷயம்.”

“புரியலே.”

“பிராமணானா இருக்கிறதுங்கிறது ஒரு மனப்பான்மைதாங்க. நான் உசந்த சாதிங்கிற ஒருவகை இறுமாப்பு. பிறவிக்கும் இதுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லீங்க. மத்தவங்க தாழ்ந்த சாதின்னு நினைக்கிற எல்லாருமே பிராமணர்கள்னு என் அபிப்பிராயம்.”

“நீ சொல்லறது ஒண்ணும் எனக்கு விளங்கலே... நான் அவங்ககிட்டே சொன்னேன், நல்லா நடத்துங்க, பிராமண எதிர்ப்பு மாநாட்டை, ஆனா ‘அடி, உதை’ன்னு வன்முறை கூடாது. ‘சிறுபான்மையா’ இருக்கிறவங்களுக்கு நாம பாதுகாப்புத் தர வேணாம்?” என்று சொல்லிக்கொண்டே நாயைப் பரிவுடன் தடவிக் கொடுத்தார்.

தான் சொல்வதை அவர் புரிந்துகொள்ள முயற்சி செய்யவில்லை என்று ராஜுவுக்குத் தோன்றிற்று.

பிராமணர்கள் எந்த விதத்தில் சிறுபான்மை வகுப்பினர் என்று சொல்ல முடியும்? அவர்களும் தமிழர்கள்தானே? தமிழ்ச் சமூகம் என்று எடுத்துக்கொண்டால் ஒவ்வொரு சாதியினரும், இவர் கூறுகிறபடி பார்க்கும்போது, சிறுபான்மை யினர்தானே?

“என்ன பேசாமலிருக்கே?” என்றார் அவர்.

“பிராமணர்கள் எந்த விதத்தில் சிறுபான்மை யினர்னு எனக்குப் புரியலே... சாதியே அபத்தம்ங்கிறபோது..”

“என்ன அபத்தத்தைக் கண்டுட்டே? அது ஒரு அடையாளம். அடையாளம் இல்லாமே மிருக ஜாதிகள்தாம் இருக்கும். பாக்கப் போனா அதுக்கும் அடையாளம் உண்டு. இந்த நாய் இருக்கே இது மிக உசந்த சாதி அல்சேஷன். தெருலெ போற நாயோட இதைக் கூட விட்டுரோவாமா? முஸ்லீம்ஸ், கிறிஸ்துவங்க இவங்களைச் சிறுபான்மைங்கிறாங்களே, அதுக்கு என்ன அர்த்தம்?”

“அவங்க வேற மதங்கிறதினாலே சிறுபான்மை யினர்னு சொல்றோம். சாதிக்கும் இதுக்கும் சம்பந்தமே யில்லே” என்றான் ராஜு.

அவர் சிறிது நேரம் பேசாமலிருந்தார்.

அப்பொழுது உள்பக்கத்திலிருந்து ஒருவர் வந்தார். பார்ப்பதற்குக் ‘கார்ட்டூன்’ போலிருந்தார். பெரிய தலை, சின்ன சரீரம். உடம்பு முழுவதும் திருநீறு... பஞ்சாங்கத்தைப் பார்த்து மழிக்கும் முகம். பிராமணர்.

அவரைப் பார்த்து அவன் வியப்படைந்தான்.

“என்ன பாக்கிறே? ஐயரு தெனம் பூசை செய்ய வராரு. நான் பெரியார் பக்தன்தான். ஒரு வகையிலே பெரியாரு எனக்கு உறவு கூட. ஐயரே, தம்பிக்குப் பிரசாதம் கொடுங்க.”

“பேஷா!” என்று சொல்லிக்கொண்டே அவர் பிரசாதத்தை நீட்டினார்.

அதை வாங்குவதா வேண்டாமா என்று யோசித்தான். ஐயரைப் பார்த்தால் பரிதாபமாக இருந்தது.

வாங்கிக்கொண்டான். திருநீற்றை நெற்றியில் பூசிக்கொள்ளவில்லை.

“ஐயரே, தம்பி அன்னிக்கு வந்தாங்களே அவங்க மாதிரி உங்களுக்கு எதிரி. புரியுதா?” என்று சிரித்துக்கொண்டே சொன்னார் அவர்.

“நாயுடுவாள்.. எல்லாம் எனக்குத் தெரியும். உங்களைப் போல உத்தம மனுஷா, யார் எதிரி யார் சிநேகிதன்னு பாக்காமெ வாரி வாரி பணம் கொடுப்பேள். உலகத்திலே யார் எதிரி, யார் சிநேகிதன்னு பகவானே பாரதத்திலே சொல்லி யிருக்கார்” என்றார் ஐயர்.

ஐயர் இவ்வாறு சொல்லிக்கொண்டே உள்ளே போய்விட்டார்.

“சரி தம்பி. நான் வரேன்... எங்கே கருப்பஞ் சாவடியா? பணம் வேணுமானாலும் தரேன்... இன்னொரு விஷயம். ஆறு மாசத்திலே தேர்தல் வருது, உன்னோட ஒடுக்கப்பட்ட இனத்தைச் சேர்ந்த பெரியவங்களை எனக்கு ஓட்டுப் போடச் சொல்லு, புரியுதா?”

“நல்லா புரியுது. ஐயாவுக்குத் தொந்தரவு கொடுத்ததற்கு மன்னிக்கவும்... நீங்க வரணும்னு உங்களை நான் வற்புறுத்தலே. பணமும் இப்பொ தேவை யில்லே. வரட்டுமா?” என்று சொல்லிக்கொண்டே வேகமாக வெளியேறினான் ராஜு.

பாண்டியன் குரைக்கும் சப்தம் அவன் காதில் விழுந்தது.

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

